"ஜனசக்தி"
சந்தா விபரம்
(தபால் செலவு உட்பட)

| | |
|---|---|
| வருடம் | 28-00 |
| 6 மாதம் | 14-00 |
| 3 மாதம் | 7-25 |
| 1 மாதம் | 2-50 |

சந்தாவுக்கு பணம் அனுப்புவோர் மேல்கண்ட விலாசத்திற்கே அனுப்பக் கேட்டுக்கொள்கிறோம்.
மானேஜர்: ஜனசக்தி 32, பிராட்வே, சென்னை-1

Regd. No. M. 5934 Poone No: 21841

# ஜனசக்தி

ஆசிரியர்: ப. ஜீவானந்தம் JANASAKTHI

(வெளியூர் பதிப்பு)





மலர் 15 இதழ் 342 | சென்னை 30-7-59 விகாரி௵ ஆடிமீ 14உ வியாழக்கிழமை | 4 பக்கங்கள் 7 காசுகள்


# கேரளக் 'கிளர்ச்சி'க்கு ஆமதாபாத் பிரமுகர்கள் கண்டனம்

## சட்டபூர்வமான சர்க்காரைக் கவிழ்க்க சட்ட விரோதமான கிளர்ச்சி!

### மத்தியிலும், 13 ராஜ்யங்களிலும் பதவி வகிக்கும் ஒரு கட்சி இக்கிளர்ச்சியைத் தூண்டும் விபரீதம்!

#### மாபெரும் பொதுக்கூட்டத்தில் ஆட்சேபத் தீர்மானம்

ஆமதாபாத், ஜூலை 28—

கேரளத்தில் காங்கிரசும் இதர எதிர்க்கட்சிகளும் நடத்தி வரும் கிளர்ச்சியை வன்மையாகக் கண்டித்து இன்று மாலை இங்கு நடைபெற்ற பெரியதோர் பொதுக்கூட்டத்தில் ஒரு தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

அரசியல் சட்டரீதியாகத் தேர்ந்தெடுக்கப்பட்டு, சட்டபூர்வமாகச் செயலாற்றிவரும் ஒரு மந்திரிசபையை சட்ட விரோதமான முறையில் கவிழ்ப்பதையே இக்கிளர்ச்சி நோக்கமாகக் கொண்டுள்ளது என்றும் அத்தீர்மானம் கூறுகிறது.

ஆமதாபாத் நகரத்தின் சகல துறைகளையும் சேர்ந்த ஐம்பது முக்கியப் பிரமுகர்கள் விடுத்த வேண்டுகோளின் படியே இக்கூட்டம் ஏற்பாடு செய்யப்பட்டது.

இந்திய சர்க்கார் ஜனநாயகத்தைப் பாதுகாக்க முன்வர வேண்டுமென்றும், கேரள கிளர்ச்சிக்காரர்கள் பலாத்கார நடவடிக்கைகளையும் சட்ட விரோதமான கிளர்ச்சி முறைகளையும் கைவிடவேண்டுமென்று அறிவுறுத்த வேண்டுமென்றும் அந்த வேண்டுகோள் கேட்டுக் கொண்டது.

இந்தக் கூட்டத்திற்கு, பம்பாய் சட்டசபையில் மகா குஜராத் ஜனதா பரிஷத் குழுவின் தலைவர் திரு. கோதாபாய் படேல் தலைமைவகித்தார்.

அக்கூட்டத்தில் நிறைவேற்றப்பட்ட தீர்மானம் மேலும் கூறுவதாவது:

"கேரளத்தில் நடைபெறும் இந்தக் கிளர்ச்சி எத்தகைய குறிப்பான, நியாயமான கோரிக்கைகளுக்காகவும் நடத்தப்படவில்லை ஆனால் சட்டபூர்வமாகத் தேர்ந்தெடுக்கப்பட்ட சர்க்காரை எந்த நியாயமும், நீதியுமின்றி கவிழ்ப்பதற்காக நடத்தப்படும் ஒருதலைப்பட்சமான கிளர்ச்சியே என்று இக்கூட்டம் கருதுகிறது. ஆகவே இக்கிளர்ச்சியை வாபஸ் பெறும்படி அதன் கர்த்தாக்களை இக் கூட்டம் கேட்டுக் கொள்கிறது."

மத்திய சர்க்காரிலும், இதர 13 ராஜ்யங்களிலும் அதிகாரத்திலுள்ள ஒரு கட்சி (காங்கிரஸ்) இந்தக் கிளர்ச்சிக்கு ஊக்கமூட்டும் சக்தியாக இருப்பதைக் கண்டு இக்கூட்டம் தன் ஆழ்ந்த கவலையைத் தெரிவித்துக் கொள்கிறது என்றும் அத்தீர்மானம் கூறுகிறது. (பி. டி. ஐ.)

## புதுவை தேர்தலுக்கு

### ரோடியர் மில் தொழிலாளர் நன்கொடை

#### ரூ. 500 அளித்துள்ளனர்

புதுவை, ஜூலை 27—

புதுவை செஞ்சி சாலையில் திரு. கே. ஏ. எம். பழனிசாமி செட்டியார் (புதுவை அன்னை மேயர்) அவர்கள் தலைமையில் மாலை 6-30 மணிக்கு தோழர் சரஸ்வதி சுப்பையாவை ஆதரித்து தேர்தல் பொதுக்கூட்டம் நடைபெற்றது. தோழர்கள் பி. ராமமூர்த்தி, வி பி சிந்தன், சரஸ்வதி சுப்பையா ஆகியோர் பேசினர்கள்.

கூட்டத்தில் ரோடியர் மில் தொழிலாளர் சங்கத்தின் சார்பில் புதுவை ராஜ்ய தேர்தல் நிதிக்காக ரூ. 500 புதுவைத் தேர்தல் குழு கன்வீனர் தோழர் வி. பி. சிந்தனிடம் அளிக்கப்பட்டது. அவர் அதற்கு நன்றி தெரிவித்துப் பேசுகையில், இந்த ராஜ்யத்தில் ஓர் மாற்று சர்க்கார் அமைய வேண்டியதன் அவசியம் பற்றியும், அந்த சர்க்கார் இந்த ராஜ்ய நல்வாழ்வுக்கான தொழில் வளர்ச்சி, விவசாயிகளின் நலன், தொழிலாளர்களின் பாதுகாப்பு, வேலையில்லாதவர்களின் அபிவிருத்தி, மக்களுக்கான ஜனநாயக உரிமைகள், லஞ்ச ஊழலற்ற நேர்மையான நிர்வாகம் இவைகளுக்கான உத்திரவாதம் பற்றியுமே பேசினார்.

நிகழ்ச்சிகளும், தஞ்சை தியாகி சிவராமன் நாடக மன்றத்தினரின் 'காணி நிலம்', 'யாருக்கு இந்த உலகம்' என்ற நாடகங்களும் நடைபெற வருகின்றன. இதுவரை புதுவை பிரதேசத்தில், தோழர்கள், பி. ராமமூர்த்தி, கே. டி. ராஜு, கே. ரமணி, ஆர். உமாநாத், வி. பி. சிந்தன், என். சங்கரய்யா, கோவை மேயர் பூபதி, வ. சுப்பையா, டாக்டர் என். ரங்கநாதன், ஜி. சாமுவேல் (போராளி) ஆகியோர் கலந்து கொண்டு சொற்பொழிவாற்றியுள்ளார்கள். மேலும் பல சிறந்த பேச்சாளர்கள் புதுவை வரவிருக்கின்றனர்.

**மைக்குகள், கார்கள் உதவி**

இதுவரை பண்ணேப்புரம் தனபால் சவுண்டு சர்வீஸ், சித்ரா சவுண்டு சர்வீஸ், காஞ்சி சங்கர் சவுண்டு சர்வீஸ் மேலூரிலிருந்து ஒரு மைக்கும் வந்துள்ளது. மேலும் திருச்சியிலிருந்தும், திருப்பூரிலிருந்தும் இரண்டு கார்கள் வந்திருக்கின்றன.

**புதுவைத் தேர்தலுக்கு**

தமிழகத்தின் பல பகுதிகளிலிருந்து தேர்தல் இயக்கத்தில் ஈடுபட பல தோழர்கள் புதுவை வந்துள்ளனர். தென் ஆற்காடு ஜில்லாவிலிருந்து, பி. செயராமன், எஸ். நடராஜன், ஜி கோவிந்தராஜுலு, ஷாஜாதி, கே. பி. கோவிந்தன், கே. திரு வேங்கடம், பாலன், ஏகாம்பரம் டி. ஆர். விஸ்வநாதன் (சிதம்பரம்), ஆர். முருகேசன், ஏ. லோகநாதன், திருக்கோவிலூர் பாலகிருஷ்ணன், மாலிமணி, தூக்கணம்பாக்கம் என். சீனுவாசன், கே. வேணுகோபால், ராமசாமி (சிதம்பரம்) சிதம்பரம் செல்வராஜ், திருக்கோவிலூர் தெய்வசிகாமணி, திண்டிவனம் பாலகிருஷ்ணன், இருமாபுரி, திண்டிவனம் நரசிம்மன், பத்மநாபன், வளவனூர் ராஜாராம் ஆகியோர்களும், மதுரையிலிருந்து தோழர் ராமராஜ் அங்கமுத்து, திருப்பூரிலிருந்து தோழர் கணபதி, சேலத்திலிருந்து தோழர் செல்லப்பன், ஆகியோர் வந்திருக்கின்றனர். இன்னும், தங்கராஜ், எஸ் காமராஜ், மதனகோபால கே.பி ஜானகியம்மாள் மதுரையிலிருந்தும் வருவார்கள் என்று எதிர்பார்க்கப்படுகிறது. திருச்சியிலிருந்து பாப்பாவும் வரவிருக்கிறார்கள்.

புதுவைப் பிரதேசம் பூராவிலும் மக்கள் முன்னணியின் தேர்தல் பிரச்சாரம் சூறாவளி வேகத்தில் நடைபெறுகிறது. தினசரி பல கூட்டங்களும், பாவலர் வரதராஜன் குழுவினரின் இசை

## மக்கள் முன்னணி அபேட்சகருக்கு ஆதரவு பெருகி வருகிறது

### ஏம்பலம் தொகுதியில் 3000 பேர் திரண்ட பொதுக்கூட்டம்

பண்டசோழநல்லூர், ஜூலை 25

ஏம்பலம், கல்மண்டபம் தொகுதியில் போட்டியிடும் மக்கள் முன்னணி அபேட்சகர் திரு சந்திரசேகர ரெட்டியாரை ஆதரித்து ஏம்பலத்தில் பொதுக்கூட்டம் நடைபெற்றது கூட்டத்திற்கு 3000க்குமேற்பட்ட பொது மக்கள் திரண்டிருந்தனர். தோழர் சுப்பையா, சந்திரசேகர ரெட்டியார், ஆழ்வார். ஆர். முருகேசன் ஆகியோர்கள் பேசினர்.

**மாற்று சர்க்கார் அவசியம்**

அபேட்சகராக நிற்கும் சந்திரசேகர ரெட்டியார் தன்னை ஆதரிக்கும்படி கேட்டுக்கொண்டார்

மக்கள் முன்னணி தலைவர் தோழர் சுப்பையா அவர்கள் பேசுகையில் "புதுவை மக்களாகிய நீங்கள் இதுவரை அரசாண்ட காங்கிரஸ் கட்சியினரையும், அதே நபர்கள் பிரஞ்சு ஏகாதிபத்யத்தின் கையாடகளாக ஆட்சிபுரிந்ததையும் கண்டீர்கள். அவர்கள் மக்களின் எந்த பிரச்சினையையும் தீர்க்க முடியாமல்போனது மட்டுமல்ல, நீங்கள் கண்டது! ஆட்சியை திறமையாக நடத்தவும் முடியாதவர்கள் என்பதையும் காட்டி விட்டனர். அதனை ஆதரவிழந்த அவர்கள் மீண்டும் பதவிக்குவர ஜாதியைக் காட்டி மயக்க நினைக்கிறார்கள். ஆனால் மக்கள் முன்னணியோ மக்களுக்கான திட்டங்களை முன் வைத்து உங்கள் ஆதரவைக் கேட்கிறது மாற்றுச் சர்க்கார் வேண்டும் என்ற எண்ணத்தை பூர்த்தி செய்ய, மக்கள் முன்னணிக்கு ஓட்டளியுங்கள்" என்று கேட்டுக்கொண்டார். பின்னர் தெ. ஆ. ஜி. விவசாய சங்கக் காரியதரிசி தோழர் கே. முருகேசன் பேசினார்.

**ஊர்வலம்**

மாலையில் தூக்கணம்பாக்கம், நல்லாத்தூர், மற்றும் பல ஊர்களிலிருந்து சுமார் 400 பேர் கொண்ட ஊர்வலம், தாரை தப்பட்டைகளுடன் ஏம்பலம் வீதிகளின் வழியாக வந்தது. ஏம்பலத்திலேயே இதுவரை இப்படிப்பட்ட கூட்டமே நடந்ததில்லையென்று மக்கள் பேசிக்கொண்டனர். இரவு 10 மணிக்கு நடைபெற்ற 'காணி நிலம்' என்ற நாடகம் நடைபெற்றது. மழை தூரலிலும் அமைதியாக நனைந்துக்கொண்டே மக்கள் நாடகத்தைப் பார்த்தனர். —ந. நி

### கோவிந்தன் நாயர் டில்லி பயணம்

திருவனந்தபுரம், ஜூலை 28—

கேரள கம்யூனிஸ்ட் கட்சி செயலாளர் தோழர் எம். என். கோவிந்தன் நாயர் இன்று விமானம் மூலம் டில்லி பயணமானார். இந்திய கம்யூனிஸ்ட் கட்சியின் பொதுக்காரியதரிசி தோழர் அஜய் கோஷை சந்தித்து பேசுவார் என்றும் ஒரு வார காலம் டில்லியில் தங்குவார் என்றும் தெரிய வருகிறது. பி. டி. ஐ

### கம்யூனிஸ-எதிர்ப்புப் போரில் கேரளம் ஒரு ஆரம்பம்தானும்!

#### சங்கரின் பிதற்றல்

ஹைதராபாத், ஜூலை 28—

கம்யூனிஸத்தை எல்லா இடங்களிலும் எதிர்த்துப் போராட வேண்டுமென்றும, கேரளத்தில் மத்திய சர்க்கார் தலையீடு இந்தப் போராட்டத்தின் ஆரம்பம் தானே தவிர முடிவு அல்லவென்றும் கே.பி.கா.க. தலைவர் திரு. ஆர். சங்கர் இங்கு காந்திபவன மண்டபத்திற்குள் நடைபெற்ற ஒரு கூட்டத்தில் பேசினார்.

## கேரள சர்க்கார் கேட்ட உதவிகளை மத்திய சர்க்கார் கொடுத்ததாம்!

### டில்லியில் நேருவின் பேச்சு

புதுடில்லி, ஜூலை 28—

பத்திரிகை நிருபர்களிடம் பிரதமர் நேரு இன்று பேசும் போது குறிப்பிட்டதாவது:

"சென்ற ஞாயிறன்று திருவனந்தபுரத்திற்கு ராணுவம் சென்றது ஒரு விசேஷ நிகழ்ச்சியல்லவென்றும் வழக்கமாகச் செல்வதுதான்" என்றும் மேலும் தோழர் அஜய் கோஷ், கேரள முதலமைச்சர் இ.எம்.எஸ். நம்பூதிரிபாட் ஆகியோரின் குற்றச்சாட்டை குறிப்பிட்டு அவர் கூறியதாவது:—

'கேரள சர்க்கார் கேட்ட உதவி எல்லாம் கொடுக்கப்பட்டது. மேலும் ''கேரளப் பிரச்சினை முக்கியமானதானென்றும் ஆனால் முக்கிய அரசியல் தலைவர்கள் சந்தித்து பேசுவதெல்லாம் கேரளாவை பற்றிதான் என்று பொருள் கொள்வது தப்பாகும்" என்று கூறினார்.

### கேரள சர்க்காரின் பதில்

#### மத்திய மந்திரிகள் பரிசீலனை

புதுடில்லி, ஜூலை 28—

கேரளப் பிரதேசக் காங்கிரஸின் மகஜருக்குக் கேரள சர்க்கார் கொடுத்துள்ள பதிலின் (பத்திரிகைகளில் வெளியான) சுருக்கத்தை பிரதம மந்திரி நேருவும், இதர சீனியர் மந்திரிகளும இன்று பரிசிலனை செய்து கொண்டிருந்ததாகக் கூறப்படுகிறது.

இன்று மாலையில் கம்யூனிஸ்ட் தலைவர்கள் அஜய்கோஷையும், ஏ. கே. கோபாலனையும் சந்தித்துப்பேசிய பின், பிரதமர் நேரு உள்நாட்டு அமைச்சர் பந்தை சந்தித்துப்பேசினார்.

### கேரள சர்க்காரின் பதிலைப் பற்றிய கேரள கவர்னரின் குறிப்பு

#### டில்லிக்கு அனுப்பிவிட்டாராம்

திருவனந்தபுரம், ஜூலை 28—

கேரளப் பிரதேசக் காங்கிரஸ் கமிட்டி இம்மாத ஆரம்பத்தில் ஜனாதிபதியிடம் சமர்ப்பித்த மகஜருக்குக் கேரள சர்க்கார் நேற்று தங்கள் பதிலை வெளியிட்டார்களல்லவா? அதுபற்றிய தன்னுடைய குறிப்பையும், தன்னுடைய ரிப்போர்ட்டையும் கேரள கவர்னர் டாக்டர் பி. ராமகிருஷ்ணராவ் மத்திய சர்க்காருக்கு அனுப்பிவிட்டார் என்று தெரிகிறது.

### ஆகஸ்ட் 3-ந் தேதி கேரள தினப் பொதுக்கூட்டங்கள்

ஆகஸ்ட் 3-ந் தேதி கேரள தினப் பொதுக்கூட்டங்களில் கீழ்க்கண்ட தலைவர்கள் பேசுவார்கள் என தமிழ்நாடு கவுன்சில் செயற்குழு அறிவிக்கிறது.

கோயமுத்தூர் —எம். கல்யாணசுந்தரம் எம். எல். ஏ.
திருச்சி—கே. ரமணி
மதுரை—கே. டி. ராஜு
தூத்துக்குடி —ஏ. பாலசுப்பிரமணியன்
வேலூர்—மணலி கந்தசாமி
சேலம்—ஆர். உமாநாத்
தஞ்சை ஜில்லா —கே. அனந்த நம்பியார்.

### பிரதமர் நேருவுடன் அஜய் கோஷ், ஏ. கே. கோபாலன் பேட்டி

புதுடில்லி, ஜூலை 28—

இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சியின் பொதுக்காரியதரிசி தோழர் அஜய் கோஷும், மக்கள் சபையில் கம்யூனிஸ்ட் உறுப்பினர் குழுவின் உபதலைவராகிய தோழர் ஏ. கே. கோபாலனும் இன்று மாலை பிரதம மந்திரி நேருவை பேட்டிகண்டுபேசினர். கேரள நிலைமையைப் பற்றி இவர்கள் விவாதித்ததாகத் தெரிகிறது.

### கோதாவரி பாலம் கட்டுவதற்கு மத்திய அரசாங்கத்தின் உதவி

ஹைதராபாத், ஜூலை 28—

கோதாவரி பத்ராச்சலம் அருகே பாலம் கட்டுவதற்கு மத்திய அரசாங்கம் ரூ. 20 லட்சம் உதவி அளிக்க முன் வந்துள்ளது இத்திட்டத்திற்கு மொத்தம் 57 லட்சம் செலவாகுமென்றும் கூறப்படுகிறது.

## கேரள கலகக்காரர்கள் ஜனாதிபதிக்கு சவால் விடுகிறார்கள்

### இதை ஏற்று அரசியல் சட்டத்தைக் காப்பது ஜனாதிபதியின் கடமை

#### சட்டமந்திரி கிருஷ்ணய்யர் விளக்கம்

சென்னை, ஜூலை 28—

"கேரளத்தில் எதிர்க்கட்சிகள் ஆரம்பித்து நடத்தி வரும் ஆர்ப்பாட்டங்கள் ஜனாதிபதிக்கு விடப்பட்டிருக்கும் சவால் ஆகும். அரசியல் சட்டத்தைக் காப்பதாக பிரமாணம் எடுத்துக் கொண்டிருக்கும் அவர் அரசியல் சட்டத்தை தகர்க்க நடத்தப்படும் கிளர்ச்சியை சகித்துக் கொள்கிறாரா என்பதே இப்போது அவருக்கு விடப்பட்டுள்ள சவாலாகும்" என்று கேரள சட்டமந்திரி திரு. வி. ஆர். கிருஷ்ணய்யர் இன்று பத்திரிகை நிருபர்களிடம் கூறினார்.

சர்க்கார் காரியாலயத்தின் மீது "படையெடுத்து" சர்க்காரை கவிழ்ப்போம் என்று கேரள காங்கிரஸ் தலைவர் திரு. சங்கர் பம்பாயில் பேசியதைச் சுட்டிக்காட்டி, இதன் அர்த்தம் என்ன என்று திரு. கிருஷ்ணய்யர் கேட்டார்.

"உள்நாட்டுக் கலகம் ஏற்படுத்துவோம், பலாத்காரமாக சர்க்காரை கவிழ்ப்போம் என்பதுதானே இதன் பொருள்? இதற்கு வேறு பொருள் உண்டு என்று பிரதமர் நேருவால் கூறமுடியுமா? உள்நாட்டுக் கலகம் விளைவிப்போம் என்று கூறுவது நமது அரசியல் சட்டத்தையே அவமதிப்பதாகுமல்லவா? இந்தச் சவாலை அரசியல் சட்டத்தைக் காப்பதாக பிரமாணம் ஏற்றுக்கொண்டிருக்கும் ஜனாதிபதி எப்படி ஏற்கப் போகிறார் என்று நான் கேட்கிறேன்?"

கேள்வி: எவ்வகையில் இந்தச் சவாலை ஜனாதிபதி ஏற்கக்கூடும்?

பதில்: அரசியல் சட்டப்படி இந்த "உள்நாட்டுக் கலகத்தை" ஒடுக்க ராஜ்ய சர்க்காருக்கு சகல உரிமையும் உண்டு. இதற்கு தேவைப்படும் எல்லா உதவியும் செய்யமத்திய சர்க்கார் கடமைப்பட்டுள்ளார்கள். இவ்வாறு செய்யத் தயங்குவது அரசியல் சட்டத்தை மத்திய சர்க்காரே அவமதிப்பதாகும். இதைவிட மோசமானது இந்தக் கலகத்திற்கு வாய்மொழியாகவோ மறைமுகமாகவோ ஆதரவளிப்பது.

கேள்வி: மத்திய சர்க்காரின் உதவியை நீங்கள் கோரினீர்களா?

பதில்: சமயம் நேரிடும்போது கண்டிப்பாய் கேட்போம. இப்போது நாங்கள் வேண்டுவதெல்லாம் கலகக்கார கும்பலுக்கு எவ்வித தார்மீக ஆதரவும் தரவேண்டாம் என்பதுதான்.

இன்னொரு கேள்விக்கு பதிலளிக்கையில், மத்திய காங்கிரஸ் தலைவர்கள் கேரளாவில் தங்கள் கட்சிக்காரர்கள் எதைப் பார்க்க அனுமதிக்கிறார்களோ அதை மட்டுமே பார்க்கிறார்கள்.

திருமதி சுசேதா கிருபளானி சொந்தக் குரலில் பேசவில்லை கருத்து அவருடையது அல்ல! எதைச் சொல்ல வேண்டும் என்று பட்டம், பனம்பள்ளி கோஷ்டி உத்தரவிடுகிறதோ அதைத்தான் அவர் சொல்கிறார்!

### பள்ளிக்கூடம் கொளுத்தப்பட்டது

கொல்லம், ஜூலை 28—

கடக்கால் சமீபம், ஹரிஜன நல இலாகா பள்ளிக்கூடம் ஒன்றுக்கு நேற்று தீவைக்கப்பட்டது.

இதனால் சுமார் ரூ 1000 பெறுமானமுள்ள பொருள்களுக்கு சேதம் ஏற்பட்டுள்ளது. இது சம்பந்தமாய் போலீஸார் ஒரு வழக்கு பதிவு செய்துள்ளனர்.

கடந்த ஐந்து நாட்களில் நெருப்பு வைக்கப்பட்ட பள்ளிக்கூடங்களில் இது இரண்டாவதாகும். ஜூலை 24-ம் தேதி கடக்கால சர்க்கார் பள்ளிக்கூடத்திற்கு நெருப்பு வைக்கப்பட்டது தெரிந்ததே.

### இந்தியாவை எதிர்த்து இங்கிலாந்து வெற்றி

மான்செஸ்டர், ஜூலை 28—

இங்கு நடைபெற்ற நான்காவது கிரிக்கெட் டெஸ்ட் பந்தயத்தில், இந்தியாவை எதிர்த்து இங்கிலாந்து வெற்றிபெற்றது.

## தூத்துக்குடி காங்கிரஸ் எம்.எல்.ஏ. மாரடைப்பால் மரணம்

மதுரை, ஜூலை 29—

தூத்துக்குடி தொகுதியிலிருந்து சென்னை சட்டசபையில் அங்கம் வகிக்கும் காங்கிரஸ் எம்.எல்.ஏ., திரு. ஏ. சாமுவேல் நாடார் இன்று காலையில் மாரடைப்பால் தூத்துக்குடியில் மரணமடைந்தார், என்று இங்கு டெலிபோன் மூலம் செய்தி கிடைத்துள்ளது. அவருக்கு வயது 60.

1958 ஜூலை 26ல் இத்தொகுதியில் நடைபெற்ற ஒட்டுத் தேர்தலில், ஒரு கம்யூனிஸ்ட் அபேட்சகரையும், தி. மு. க. அபேட்சகரையும் எதிர்த்து குறைந்த ஓட்டில் திரு. நாடார் வெற்றிபெற்றதை வாசகர்கள் அறிவர்.

தூத்துக்குடியில் தேரடி அருகில் இன்று காலை சுமார் எட்டு மணிக்கு ஒரு கிராமத்தை நோக்கி நடந்து சென்று கொண்டிருக்கையில் அவர் கீழே விழுந்து மரணமடைந்தார், என்று தெரிகிறது.

## கேரளக் கலகக்காரர்கள் முகத்தில் கரி!

### சென்னை நகர மக்கள் தந்த பதில்

#### மன்னம் ஊர்வலத்தில் 'கேரள சர்க்கார் வாழ்க' முழக்கம்

சென்னை, ஜூலை 29—

நேற்று இங்கு ஒரு கூட்டத்தில் கேரளக் கலகத் தலைவர் மன்னத்து பத்மநாபன், திரு. ராஜாராம் நாயுடு தலைமையில் பேசுகையில் இந்தியாவிலுள்ள கம்யூனிஸ்டல்லாத ராஜ்யங்கள் கேரளத்தின் "விடுதலை" (கலகப்) போராட்டத்துக்குப் பண உதவி தரவேண்டுமெனக் கேட்டுக் கொண்டார். இப்பணம் கேரள ராஜ்யத்தில் "கம்யூனிஸத்தைப் பூணடோடு அழிக்கும்" என அவர் கூறினார். உடனே ரூ 351க்கு மூன்று "நன்கொடைகள்" அளிக்கப்பட்டன.

**ஊர்வலத்தில் 'கேரள சர்க்கார் வாழ்க' கோஷம்**

சென்னையிலிருந்து வெளியாகும் காலைப் பத்திரிகைகள் சிலவற்றைப் பார்த்தால் நகரைக் குலுக்கியதோர் ஊர்வலம் நடைபெற்றதாகவும் பின்னர் நடைபெற்ற பொதுக்கூட்டத்தில் ஏராளமான மக்கள் திரண்டிருந்ததாகவும் பொருள்படும்படியாக முதலாளிப் பத்திரிகைகளில் பெரும் தலைப்புகளில் செய்திகள் வெளியாகியிருக்கின்றன. ஊர்வலத்தைக் கண்ணுறும் வாய்ப்புப் பெற்றவர்கள் இந்தச் செய்திகளைக் கண்டு சிரிப்பர்.

நகர போலீஸ் இலாகா "விரிவான" ஏற்பாடுகள் செய்திருந்தது என்பதை "ஹிந்து" முதற்கொண்டு எல்லா ஏடுகளும் ஒப்புக் கொள்கின்றன.

டெபுடி கமிஷனர் திரு. விகுழந்தைவேலு (சட்டம், ஒழுங்கு) ஏற்பாடுகளை முழுதுமாகக் கண்காணித்தார் என்றாலும் தமிழக மக்களின் கேரள சர்க்கார் ஆதரவு எழுச்சி அங்கு பிரதிபலிக்கத்தான் செய்தது.

மவுண்டுரோடு நேப்பியர் பூங்காவிலிருந்து ஊர்வலம் புறப்பட்டது. பல இடங்களிலிருந்தும் வந்து சேர்ந்த கத்தோலிக்க பாதிரிகள், கன்னிகா ஸ்திரீகள் நகரிலுள்ள கத்தோலிக்கக் கல்வி ஸ்தாபனங்களைச் சேர்ந்த மாணவ மாணவிகள், ஆங்கிலோ இந்தியசமூகத்தினர் முதலியோர் ஊர்வலத்தில் கலந்துகொண்டனர். "கம்யூனிஸ்ட் அரசாங்கம் ஒழிக" "கம்யூனிஸ்ட் அரசாங்கத் துப்பாக்கித் பலியான கத்தோலிக்கர் கடவுளின் கிருபைக்குப் பாத்திரரானார்" ஆகிய கோஷங்களை அவர்கள் எழுப்பினர். ரவுண்டானாவிலிருந்து தேனாம்பேட்டை காங்கிரஸ் மைதானம் வரை வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தவர்கள் 'கேரள மக்கள் சர்க்கார் வாழ்க' என் ஜி. ஒக்கள் நலனைக் காக்கும் கேரள சர்க்கார் வாழ்க", "ஆசிரியர் சம்பளத்தை உயர்த்திய கேரள சர்க்கார் வாழ்க" "போலீசார்களை மனிதர்களாக மதிக்கும் கேரள சர்க்கார் வாழ்க" என்று கோஷித்தனர். ஊர்வலத்திலிருந்தவர்களில் சிலர் அக்கோஷங்களை ஏற்று அவற்றை திரும்பக் கூறினர் "கேரள சர்க்கார் வாழ்க" உடனே "ஆபத்து, பிடியுங்கள்" என்று பாதிரிகள் கூச்சலிட்டனர். ஊர்வலத்தில் வந்துகொண்டிருந்தவர்கள் பலரைப போலீசார் பிடித்து ஊர்வலத்தில் செல்லாமல் தடுத்தனர். இதையொட்டி ஊர்வலத்தில் பெரும் பரபரப்பு ஏற்பட்டது.

ஊர்வலத்தினர் கோஷங்கள் எழுப்பாது மௌனம் அனுஷ்டிக்க ஆரம்பித்தனர். மவுண்ட் ரோடு தபாலாபீஸ் அருகே ஊர்வலம் வர ஆரம்பித்ததும் "தேச விடுதலைப் போராட்டத்தைக் காட்டிக்கொடுத்த மன்னம் ஒழிக!" "ஜாதிய வெறிபிடித்த மன்னம் ஒழிக" "1957ல் தோற்றோடியவர்களே, 1962ல் வாருங்கள்" என்பன போன்ற கோஷங்கள் எழுந்தன. இதனால் "ஊர்வலத்தின"ரின் உற்சாகம் அடியோடு போய்விட்டது. அவர்கள் கலவரத்துடன் சாலையின் இரு பக்கங்களிலும் பார்த்துக் கொண்டே நடக்கவாரம்பித்தனர்.

ஊர்வலம் கலைக் கல்லூரியரு

இல் வந்தபோது கலகக்காரர்களை ஜெபமாலை எதற்கு என்று பாதிரிகளை நோக்கி ஒரு கூட்டம் முன்னேறியது.

உடனே ஊர்வலம் நிறுத்தப்பட்டுப் பின்னர் மறுபடியும் கிளம்பியது. வழி நெடுகிலும் இப்படிப்பட்ட நிகழ்ச்சிகள் நடைபெற்றன. சென்னை மக்கள் கேரள மத வெறியர்களின் கலவரங்களைக் கண்டு அருவருப்பு அடைகின்றனர் என்பதை இ நிகழ்ச்சிகள் உணர்த்தின.

தேனாம்பேட்டை காங்கிரஸ் மைதானத்தில் பொதுக்கூட்டம் தொடங்கியது. திருமதி சுசேதா கிருபளானி, மன்னம், தமிழ்நாடு காங்கிரஸ் தலைவர் கே. ராஜாராம் நாயுடு, ஆர். எஸ். பி. தலைவர் ஸ்ரீகண்டன்நாயர் ஆகியோர் பேசினர்.

**படை எடுக்கப் போகிறார்களாம்!**

மன்னம் பேசுகையில் கேரளத்தில் கம்யூனிஸ்டுகள் பதவியிலிருந்து வெளியேற்றப்படுவது உறுதி எனவும், அப்படி அவர்கள் வெளியேற்றப்பட்ட பின்பு ராஜ்யத்தில் "அமைதி" ஏற்பட பல நாட்கள் பிடிக்குமெனவும் கேரளத்தில் கம்யூனிஸத்தை விரட்டப் பிற ராஜ்யங்களின் கூட்டுமுயற்சி தேவை எனவும் கம்யூனிஸத்திலிருந்து "இந்தியாவைக் காப்பாற்றும் தினம்" ஆகஸ்டு 9-ல் அனுஷ்டிக்கப்படும் எனவும் அன்று விமோசனக்காரர்கள் கேரள அரசாங்க அலுவலகத்துக்குள் "படையெடுப்பர்" எனவும் கூறினார்.

### மன்னத்தின் ஊர்வலத்துக்கு ஆள் சேர்த்தவிதம்!

சென்னை, ஜூலை 29—

நேற்று நடைபெற்ற "விடுதலை"ப் போராட்ட தளபதி மன்னத்தின் ஊர்வலத்துக்கு ஆள்சேர்க்கப் பிரமாண்டமான முயற்சிகள் செய்யப்பட்டன எனத் தகவல் கிடைத்துள்ளது. அம்முயற்சிகளின் ஒரு 'சாம்பிள்' இதோ தரப்படுகிறது:

"வண்ணாரப் பேட்டையில் திருமதி சரஸ்வதி பாண்டுரங்கம் எம்.எல்.சி. அவர்கள் நடத்தும் விடுதி வாகத்தில் உள்ள கன்னியர் குருகுல மாணவிகள் பலவந்தமாக வண்டியில் ஏற்றப்பட்டு ஊர்வலத்தில் கலந்துகொள்ளுமாறு நிர்ப்பந்திக்கப்பட்டுள்ளனர். வயதுவந்த தம் பெண்கள் இரவு நெடுநேரமாகியும் வீடு திரும்பாததைக் கண்டு பெற்றோர்கள் பதறித் துடித்திருக்கின்றனர்.

ஊர்வலத்தில் கலந்துகொண்டோருக்குத் தலா ரூ அளிக்கப்பட்டதாம்.

### புதுவை செல்லும் கம்யூனிஸ்ட் தலைவர்கள்

பி. ராமமூர்த்தி
ஜூலை 29—31

என். சங்கரய்யா
ஆக. 1 முதல் 11 வரை

எம். கல்யாணசுந்தரம் (எம். எல். ஏ.)
ஆக. 6 முதல் 11 வரை

கே. டி. ராஜு
ஆக. 5 முதல் 11 வரை

டி. கே. பாலச்சந்திரன்
ஆக. 8 முதல் 11 வரை

ஜனசக்தி

சென்னை 30-7-1959

# புதுவையில் தேர்தல் இயக்கம் தீவிரமடைகிறது

## ஊர்கள்தோறும் மக்கள் முன்னணி தலைவர்கள் முழக்கம்

## பிரதமர் நேருவின் இரட்டை நாக்கு

தமர் நேரு காஷ்மீர் சென்றபோது காஷ்மீர் களின் உண்மையான சி ஒன்றைக் கண்டார். பத்தில் பயங்கர வெள் வந்து வீடுகளும், பயிர் ம் படுமோசமான சேதத் தள்ளாகி இருக்கின்றன. று உண்பதற்குக் கூட வில்லாமல், எல்லாவற் யும் வெள்ளத்தில் இழந்து டுத் கஷ்டியாகத் தவிக் ர்கள் காஷ்மீர் மக்கள்.

)த்தகைய சூழ்நிலையி ஷ்மீரில் ஆட்சி புரியும் பி ர் நேருவின் கட்சியைச் ந்த பக்ஷி குலாம் முகமது க்கார் செய்வது என்ன? ர்க்கார் கையிலுள்ள னவை இத்தகைய அபாய யிலுள்ள ஏழை எளிய களுக்கு இலவசமாக வினி ாகித்திருக்க வேண்டும். வாறு செய்ய மறுத்தது டுமல்ல, தன் கையிலுள்ள னவின் விலையைத் திடீ ன உயர்த்தி விட்டது ஷ்மீர் சர்க்கார்.

வெந்த புண்ணில் வேல் ாண்டு பாய்ச்சும் அக்ரமச் யல் இது. வெள்ளக் ாடுமைகளால் சகலவற் யும் இழந்த ஏழை எளிய களின் பரிதாப நிலையை யோகித்து காஷ்மீர் ள்ள நேருவின் கூட்டாளி பணம் சம்பாதிக்கப் ர்க்கின்றனர். இதை திர்த்து காஷ்மீரிலுள்ள ர்க்கட்சி ஆர்ப்பாட்டங்கள் த்துகின்றனர். "உணவு லையை உயர்த்தாதீர், றைந்த விலையில் உணவு ீர்" என்று கோருகின்ற .

இதை பிரதமர் நேரு கண் . கண்ட பின் பேசியது ான?

காஷ்மீர் சர்க்கார் உணவு லையை உயர்த்திய சந்தர்ப் சரியானது அல்ல என்று ர்க்கட்சியினர் கருதி ல கூட, அதை எதிர்த்து ப்பாட்டங்களும் வேலை த்தங்களும் ஊர்வலங ம் நடத்துவது சரியான ல. இது இன்றுள்ள உட க் கடமைகளிலிருந்து மக கவனத்தை வேறு வழ திருப்புவதாகும்."

ஜூலை 27-ல் காஷ்மீரில் ஷி குலாம் கட்சியான ிய மாநாடு ஊழியர் கூட தில் பிரதமர் நேரு பேசிய சு இது.

ரு கண்ணில் வெண் ய், மற்றொரு கண்ணில ணம்பு என்பதும் ட்டை நாக்குடைய மனித பேச்சு என்பதும் இது ர.

ஷ்மீர் எதிர்க்கட்சியின கோரிக்கை நியாய து தான்! என்றாலும ர்கள் கிளர்ச்சி செய்யக் ாது. ஏனெனில் காஷ்மீ ஆட்சி புரிவது பிரதமர் யன் கட்சியைச் சேர்ந்த ள்! அதனால் பிரதமர் கேரளக் காங்கிரஸ் தலை ளுக்கு பார்லிமெண்டரி ரு தந்தது போன்ற மதி கூறவில்லை. மாறாக மீர் அரசாங்கத்திற்கு ாக, கோரிக்கை எவ்வ நியாயமாக இருந்தாலும் பாட்டங்கள் நடத்தாதீர் போதித்துள்ளார்.

ந்த வார்த்தைகளை உச்ச ம் பிரதமரின் நா கேர ல காங்கிரசும் ஏனைய க்கட்சியினரும் நடத்தும் ங்கக் குண்டாந்தனத பற்றி ஒரு கண்டன ந்தை கூட உச்சரிக்க கிறது.

கிற்கு ஜனநாயகம், நேர்மை, பண்பு, ஒழுக் போதிக்க, பிரதமரே, ளுக்கு என்ன அரு இருக்கிறது என்று து தவரு?

கள் கவனத்தை கேரள ரஸ் வேறு வழியில், கார வழியில் திருப்பு போல, ஜனநாயக பாதையில் திருப்பு ப போல், காஷ்மீர் க்கட்சியினர் மக்கள் கவனத்தை வேறு வழியில் திருப்பவில்லை. இன்று அங்கு உடனடியான பிரச்னை எதுவோ அதில்தான் கவனத்தைச் செலுத்துகின்றனர். இன்று அங்குள்ள உடனடியான பிரச்சினை குறைந்த விலையில் மக்களுக்கு உணவு கிடைக்கச் செய்வதே.

பிரதமர் நேரு இந்தக் கோரிக்கையின் நியாயத்தை மறுக்க முடியாததிலிருந்தே அவரது உபதேசம் தவறானது, பாரபட்சமானது, நேர்மையற்றது என்பது தெளிவு.

எதிர்க்கட்சி ஆட்சிநடந்தால் அதற்கு ஒரு நீதி, காங்கிரஸ் ஆட்சி நடந்தால் வேறு ஒரு நீதி! இதுதான் பிரதமர் நேருவின் நீதிபடும் பாடு.

### பஞ்சாயத்துத் தலைவர் தேர்தல்களில் விவசாய சங்க ஊழியர்கள் வெற்றி

மதுரை, ஜூலை 25— மதுரை ஜில்லாவைச் சேர்ந்த கீழ்க்கண்ட கிராமங்களில் பஞ்சாயத்து போர்டு தலைவர் தேர்தலில் விவசாய சங்க ஊழியர்கள் அமோக வெற்றிபெற்றுள்ளனர்.

திருமங்கலம் தாலுகா, வாலாந்தூர் பஞ்சாயத்துப் போர்டுத் தலைவராக தாலுகா விவசாயசங்க உபதலைவர் தோழர் இ. சொக்கலிங்கம் போட்டியின்றித் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளார்.

அதே தாலுகாவைச் சேர்ந்த திம்மனம் என்ற கிராமப் பஞ்சாயத்துப் போர்டு தலைவராக விவசாய சங்க உறுப்பினர் தோழர் எம். சொக்கர் போட்டியின்றி தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளார்.

அதே தாலுக்காவைச் சேர்ந்த பூசலப்புரம் என்ற கிராமப் பஞ்சாயத்துத் தலைவராக தோழர் எஸ். பெருமாள் போட்டியின்றி தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளார். (நநி)

## வெற்றி முரசுகொட்ட உடனே நிதி தேவை

(ஐ. மா. பா.)

புதுவை, ஜூலை 26— புதுவை ராஜ்ய அசெம்பிளித் தேர்தலில் மக்கள் முன்னணி தீவிரமாக ஈடுபட்டுள்ளது குப்பங்கள்தோறும், பாளையங்கள் தோறும், பேட்டைகள்தோறும் தேர்தல் கூட்டங்கள் தினசரி நடைபெற்றவண்ணமாக இருக்கின்றன. மக்கள் முன்னணி அபேட்சகர்கள் எல்லா தொகுதிகளிலும் பேசி வருகிறார்கள். குறிப்பாக, மக்கள் முன்னணித் தலைவர்களான வி. சுப்பையா, திருமதி சரஸ்வதி சுப்பையா, டாக்டர் என் ரங்கநாதன், இளமென்ஸோ, ஆர். வைத்தியலிங்கம், கோவிந்தராசு நாயக்கர், ஜனுப் உசேன் கவி நாகா, என். குருசாமி முதலியோர்களும், மற்றும் மாதர் சங்கத் தலைவர்கள் தையநாயகி அம்மாள், ஷாஜாதி, என். எஸ். ருக்குமணி, கே. பி. ஜானகியம்மாள் ஆகியோர்களும் பிரச்சார வேலையில் தீவிரமாக ஈடுபட்டிருக்கிறார்கள்.

தோழர்கள் வி. பி. சிந்தன், மணலி கந்தசாமி, கே. ரமணி, கே. டி. ராஜு, உமாநாத், தஞ்சை ஜில்லா விவசாயிகள் தலைவர் காத்தமுத்து, கடலூர் அமிர்தலிங்கம், ஐ. மாயாண்டி பாரதி, வி. மதனகோபால், எஸ். ஏ. தங்கராஜ், சேலம் செல்லப்பன், மதுரை ராமராஜ், தண்டபாணி, சிதம்பரம் விசுவநாதன், புதுப்பேட்டை ஏகாம்பரம், எஸ். ஏ. முருகானந்தம், திண்டிவனம் முருகேசன், கடலூர் நடராஜன், பி. புருஷோத்தமன், சி. கோவிந்தராஜன், வி. கே. கோதண்டராமன், கே. ஆர். சுந்தரம், திருப்பூர் கணபதி, புலவர் ஏ. லோகநாதன், ஆர். கலி ராஜன் முதலியவர்களும் பொதுக் கூட்டங்களில் பேசியிருக்கிறார்கள். தோழர்கள் பி. ராமமூர்த்தி, கோவை நகரசபைத் தலைவர் பூபதி ஆகியோர்களும் பேசியது ஏற்கனவே தெரிந்ததே. தஞ்சை தியாகி சிவராமன் நாடக மன்றத்தாரின் "காணி நிலம், யாருக்கு இந்த உலகம்" என்ற நாடகங்களும் தினசரி நடத்தப்படுகின்றன. பாவலர் வரதராஜன் குழுவினரின் இன்னிசைக் கச்சேரிகளும் நடைபெறுகின்றன.

எல்லாக்கூட்டங்களிலும் ஆயிரக்கணக்கில் மக்கள் கூடி, ஆரவாரம் செய்து, வாழ்த்தொலிகள் எழுப்பி ஆதரவு கொடுத்து வருகிறார்கள். பெண்களும் ஆயிரக்கணக்கில் வந்து தலைவர்களின் சொற்பொழிவுகளைக் கேட்கிறார்கள். கலை நிகழ்ச்சிகளைக் கண்டு மகிழ்கிறார்கள்.

### ஒலிபெருக்கிகளும் கார்களும்

மதுரை ஜில்லா பெரியகுளம் தாலுகா பண்ணைப்புறத்திலிருந்து சித்ரா சௌண்டு சர்வீஸும், தனபால் சௌண்டு சர்வீஸும் ஒலி பெருக்கிகள் அனுப்பியிருக்கிறார்கள். மதுக்கரை சிமிண்டுத் தொழிலாளர்கள் ஒரு ஒலிபெருக்கி அனுப்பியுள்ளார்கள். காஞ்சீபுரத்திலிருந்து சங்கர் சௌண்டு சர்வீஸும், திருப்பூரிலிருந்தும், ரைஸ் மில் தொழிலாளர்களும் பனியன் பாக்டரி தொழிலாளர்களும் ஒலிபெருக்கியுடன் கூடிய கார் ஒன்று அனுப்பியிருக்கிறார்கள். சென்னை கம்யூனிஸ்ட் கட்சியிடமிருந்து ஒரு மைக்கும் வந்திருக்கிறது.

மதுரை, திருச்சி, காஞ்சீபுரம், திருப்பூர் ஆகிய இடங்களிலிருந்து கார்கள் வந்துள்ளன.

### ஏ. கே. கோபாலன்

மக்கள் சபை கம்யூனிஸ்ட் கட்சி உபதலைவர் ஏ. கே. கோபாலன் எம். பி. 26—7—59ல் முதலியார் பேட்டையில் பேசினார். திருமதி ரேணு சக்கரவர்த்தி எம். பி. அவர்கள் புதுவைப் பொதுக்கூட்டத்தில் பேசுவதாக இருந்தார். அவசர நிலைமையின் காரணமாக அவர் வர இயலவில்லை.

### காங்கிரஸ்

காங்கிரஸ் கட்சியினர் புதுவை நகரத் தொகுதிகளில் ஜாதியைக் காட்டி ஓட்டுக் கேட்க ஆரம்பித்துவிட்டனர். ஆனால் போட்டியிடும் அபேட்சகர்களில் ஒரே ஜாதியைச் சேர்ந்த பலர் இருப்பதால் அவர்களது பிரச்சாரம் எடுபடுவதாக இல்லை.

குபேர் பல கூட்டங்களில் பேசத் தொடங்கியிருக்கிறார். அக் கூட்டங்களுக்கு 20 பேர் 50 பேர்தான் வருகிறார்கள் அவர்கள்கூட ஆதாயத்தின் காரணமாகத்தான் வருகிறார்கள். சில இடங்களில் மக்கள் முன்னணி ஆதரவாளர்களை அடிப்பதும், செங்கொடியைத் திருட்டுத்தனமாய் இறக்குவதுமான வேலைகளில் ஈடுபட்டிருக்கிறார்கள். கூலி கொடுத்து காங்கிரஸ் கொடிகளுடன் 50, 60 பேர்களைக் கொண்ட சைக்கிள் ஊர்வலமொன்றும் நடத்தினார்கள். சுதந்திரம் வாங்கிக்கொடுத்த காங்கிரசுக்கு ஜே! என்று அவர்கள் கோஷித்துக்கொண்டு போனபோது, அந்த ஊர்வலத்தைக் கண்டபொதுமக்கள் "சுதந்திரம் வாங்கிக் கொடுத்தது குபேரா?" என்று பேசிச் சிரிக்கிறார்கள். ஆயிரக் கணக்கான மக்கள் திரண்டு வருவார்கள் என்று நினைத்துக்கொண்டு காங்கிரஸ்காரர்கள் ஒரு மைதானத்தில் கூட்டம் போட்டார்கள். ஆனால் கூட்டத்தில் நூறு பேருகூட சேரவில்லை. எனவே வெட்கம் பிடுங்கித் தின்ன மைக்கையும் டேராவையும் தூக்கிக்கொண்டு ஒரு சந்து முனைக்குப் போய் கூட்டம் நடத்தினார்கள்.

கூட்டங்களில் குபேர் பேசுகிறபோது, தோழர்கள் சுப்பையாவையும், சரஸ்வதி சுப்பையாவையும், டாக்டர் ரங்கநாதனையும் 'கொள்ளைக்காரர்களென்றும், கொலைக்காரர்களென்றும், ஒழுக்கமில்லாதவர்களென்றும் திட்டிவருகிறார்.

கேரளத்தில் கத்தோலிக்கர்களையெல்லாம் கம்யூனிஸ்டுகள் சுட்டுக்கொன்றுவிட்டதாகவும், மாதாகோவில்களையெல்லாம் இடித்துத் தரைமட்டமாக்கிவிட்டதாகவும் எழுதி பல இடங்களில் போர்டுகள் தொங்கவிட்டிருக்கிறார்கள் சுவர்களிலும் முச்சந்தி வீதிகளிலும் எழுதியிருக்கிறார்கள்.

காசு பணத்தை எடுத்துக்கொண்டு, இரவோடிரவாக ஆள் பிடிக்கும் படலத்தில் தீவிரமாக ஈடுபட்டிருக்கிறார்கள். மக்கள் முன்னணி சார்பில் ரங்கநாதன் போட்டியிடும் முத்தியால்பேட்டையில் ஒரு அபேட்சகர் தமக்கு ஓட்டுப்போட்டால் அவர்களுக்கு ஒரு செப்புக்குடம் கொடுப்பதாகக்கூறி ஓட்டுக் கேட்டிருக்கிறார். அது மட்டுமல்ல, செப்புக்குடங்கள் செய்ய கும்பகோணத்துக்கு ஆர்டர் வேறு கொடுத்திருக்கிறார். இந்த விஷயத்தை மக்கள் முன்னணிக் கூட்டங்களில் அம்பலப்படுத்தியதோடு, அப்படிக் குடம் வாங்குகிறவர்களைப் பிடித்து போலீஸில் ஒப்படைத்துச் சிறையில் தள்ள ஏற்பாடும் செய்வோமென்று பேசினார்கள். இரகசிய விஷயம் அம்பலத்துக்கு வந்துவிடவே, கும்பகோணம் ஆர்டரை ரத்து செய்துவிட்டதாகவும் தெரிகிறது.

இது தவிர, பாரதிதாசன் தன்னுடைய பத்திரிகையில், மக்கள் முன்னணியையும், கம்யூனிஸ்டு கட்சியையும், தலைவர் சுப்பையாவையும் கேவலமாகத் திட்டி எழுதிவருகிறார். குறிப்பாக புதுவை மக்களின் சுதந்திரத் தெய்வமாகவும், தொழிலாளி வர்க்கத்தின் அன்பின் தலைவராகவும் விளங்கும் சுப்பையாவை "திருடன்" என்று அவரது பத்திரிகையில் எழுதியிருப்பது கண்டு சகல பகுதி மக்களும் புரட்சிக் கவிஞர் இவ்வளவு தூரம் மட்டரகமாகப் போய்விட்டாரா என்று ஆச்சரியமும் அருவருப்பும் ஆத்திரமும் அடைந்துள்ளார்கள்.

### நிதி உதவி அவசரம்

மக்கள் முன்னணி வெற்றி பெற தமிழகத்தின் பல்வேறு ஊர்களிலிருந்தும் கம்யூனிஸ்ட் கட்சிக் கிளைகள் யூனிட்டுக்கு 5 ரூபாய் வீதம் அனுப்பிவருகின்றன. புதுவை ராஜ்ய மக்களும் நிதி உதவி செய்து வருகிறார்கள். என்றாலும் சகல தொகுதிகளிலும் முனைந்து வேலை செய்வதற்கு இவை போதவில்லையென்று கம்யூனிஸ்ட் கட்சியின் தேர்தல் குழு கன்வீனர் தோழர் வி.பி. சிந்தன் கூறினார். தேர்தல் நாள் நெருங்கிவிட்டபடியால் கட்சி யூனிட்டுகள் சிறிதும் கால தாமதம் செய்யாமல் தத்தம் கோட்டாவை அனுப்பிவைக்குமாறும் கேட்டுக்கொண்டுள்ளார் கட்சியின் அனுதாபிகளும் ஆதரவாளர்களும் இயன்ற நிதி உதவியை உடனே அனுப்பிவைத்தால் தேர்தல் வேலைகள் வெகு மும்முரமாக ஜாம்ஜாமென்று நடக்கும்.

### மாற்று சர்க்கார்

மக்கள் முன்னணிக் கூட்டங்களிலெல்லாம், "5 வருடம் கழித்து நடக்கவேண்டிய தேர்தல், ஏன் இப்படி மூன்றாவது வருடத்திலேயே நடத்தப்படுகிறது' என்பதை நன்கு விளக்குகிறார்கள் சென்ற தேர்தலில காங்கிரஸுக்கு 20ம் மக்கள் முன்னணிக்கு 19ம் தான் ஸ்தானங்கள் கிடைத்தனவென்றும், பின்னர் லஞ்சம், மிரட்டல், பஸ்ரூட் பெர்மிட் முதலிய ஆசைகளைத் தூவிவிட்டு, மக்கள் முன்னணியிலிருந்த சில ஊசலாட்டக்காரர்களை காங்கிரஸுக்குச் சேர்த்து 26 பேர்களாக ஆக்கிக்கொண்டார்களென்றும், அப்படி அசைக்க முடியாத மெஜாரிட்டியாக இருந்தும் மூன்றாவது வருடத்திலேயே மந்திரி சபை முறிந்துவிழ வேண்டிய அவசியமென்ன? கோஷ்டி சண்டையால் கப்பல் கவிழ்ந்தது என்றால், அது மக்கள் நலனை முன்வைத்து நடைபெற்ற கோஷ்டிச் சண்டையா அல்லது பரஸ்பரம் லஞ்சம் அடிப்பதிலும் பெர்மிட், காண்ட்ராக்ட், லைசென்ஸ், உத்தியோகச் சலுகைகள் ஆகியவற்றைப் பங்கு போட்டுக் கொள்ளுவதில் ஏற்பட்ட கோஷ்டிச் சண்டையா? இந்த கீழிடத்துப் பிளவை மேலிடத்துத் தலைவர்கள் எத்தனை ஒட்டுப் பிளாஸ்திரி போட்டும் சரிக்கட்ட முடியாதுபோன காரணமென்ன? மீண்டும் இதே காங்கிரஸ் பெருவாரியான ஸ்தானங்களைப் பெற்று மந்திரிசபை அமைத்தாலுங்கூட, கோஷ்டிச் சண்டை முடியுமா? ஏனென்றால் தீராத கோஷ்டிச் சண்டையில் ஈடுபட்ட ஜென்மப் பகைவர்களான குபேரும் புருஷோத்தம ரெட்டியாரும்தானே இப்பொழுதும் காங்கிரஸ் சார்பில் நிற்கிறார்கள்? இவர்கள் மந்திரிசபையமைப்பதிலும், அமைத்த மறுநாளிலிருந்தும் பழைய பதவிச் சண்டையும் கொள்ளைத் தகராறும்தானே ஆரம்பித்துவிடும்! மறுபடியும் பிளவு, அசெம்பிளி கலைதல், மறுதேர்தல் விவகாரம், அதற்காக மக்கள் வரிப்பண விரயம் ஆகத்தானே செய்யும்? மஜாரிட்டி பெற்றும் நிலையான சர்க்கார் அமைக்க முடியுமா? ஐந்தாண்டுத் திட்டத்துக்கென மத்திய சர்க்கார் புதுவை ராஜ்யத்துக்கு ஒதுக்கிய பணத்தில் ஆண்டுதோறும், 40, 50 லட்சம் ரூபாய் செலவழிக்கப்படாமல் திருப்பியனுப்பிய காங்கிரஸ் ஆட்சியின் கையாலாகாத் தனத்தை விளக்கியும், மக்கள் முன்னணியின் தேர்தல் திட்டங்களை விளக்கியும் வருகிறார்கள்.

எனவே, ஸ்திரமான, மக்களுக்கு நன்மையளிக்கும் குறியும் நெறியும் கொண்ட மாற்று சர்க்கார் அமைக்க மக்கள் முன்னணிக்கு ஆதரவு கொடுக்க வேண்டுமென்று தலைவர்கள் பேசி வருகிறார்கள். மக்கள் ஆதரவு அமோகமாகப் பெருகிவருகிறது.

## கேரள அரசாங்கத்தைப் பாதுகாக்க நிதி தாரீர்

### எம். என். கோவிந்தன் நாயர் வேண்டுகோள்

திருவனந்தபுரம், ஜூலை 27— "கேரள அரசாங்கத்தைப் பாதுகாக்க நிதிதாரீர் என்று கேரள ராஜ்யத்திற்கு வெளியிலுள்ள மக்களுக்கு இந்திய கம்யூனிஸ்ட் கட்சியின் கேரள கமிட்டிச் செயலாளர் தோழர் எம். என். கோவிந்தன் நாயர் ஒரு வேண்டுகோள் விடுத்திருக்கிறார்."

"கேரள கம்யூனிஸ்ட் சர்க்காரை ஆதரித்துவரும் ஜனநாயகவாதிகள் கணிசமான நன்கொடைகளும் வழங்குவரென்று நம்புகிறேன். கேரள ஜனநாயகப் பாதுகாப்புக்கு எவ்வளவுக்கெவ்வளவு நிதிகள் வந்து குவிகின்றனவோ அவ்வளவுக்குத் திறம்பட செயல்படக்கூடும்; ஜனநாயகத்தின் அறைகூவலைச் சமாளித்து கேரளத்தைப் பாதுகாக்க நிதி உதவி மிக்க அவசியம்"

நிதி அனுப்பவேண்டிய முகவரி: எம். என். கோவிந்த நாயர், கம்யூனிஸ்டுக் கட்சி அலுவலகம், திருவனந்தபுரம்.

## கேரளத்தில் எதிர்க் கட்சிகளின் இணைப்பு நேர்மையானவை அல்ல

### முதலமைச்சர் இ. எம். எஸ். விளக்க உரை

**கேரள முதலமைச்சர் தோழர் இ. எம். எஸ். "நியூ ஏஜ்" பத்திரிகையில் எழுதிய கட்டுரையை ஜூலை 27 ஜனசக்தியில் ஒரு பகுதி வெளியிட்டோம். அதன் மறு பகுதி கீழ்வருமாறு:**

கேரள எதிர்க் கட்சிகளைத் தனியாக மதிப்பிட்டால் அவை பலமற்றவையாக இருந்தாலும் அக்கட்சிகள் எல்லாம் ஐக்கியப்பட்டிருப்பதால் அவை ஒரு பலமுள்ள சக்தியாக மாறிவிடவில்லையா என்ற கேள்வி ஒன்று எழலாம். இந்தப் பல்வேறு அரசியல் கட்சிகளிடை பிளவால் தான் கடந்த பொதுத் தேர்தலில் கம்யூனிஸ்ட் கட்சி வெற்றிபெற்றது உண்மையல்லவா என்ற கேள்வி எழலாம். இந்தச் சர்க்காரைக் கவிழ்க்கவும் அடுத்த பொதுத் தேர்தலில் கம்யூனிஸ்ட் கட்சியைத் தோற்கடிக்கவும் இந்த கட்சிகள் ஐக்கியப்பட்டிருப்பதால், இவை அனைத்தும் கூட்டாகக் கம்யூனிஸ்ட் கட்சியைவிட ஒரு பெரிய சக்தியாக இருக்கவில்லையா என்று கேட்கவும் கூடும்.

நாட்டின் பொருளாதார, அரசியல் வாழ்க்கையின் மிக முக்கிய விஷயங்களில் ஒரு குறைந்தபட்ச உடன்பாட்டை அரசியல் கட்சிகளின் ஐக்கிய முன்னணி அடிப்படையாகக் கொண்டிருக்கவேண்டும். கேரளத்தில் இப்பொழுது ஐக்கியப் பட்டிருக்கும் கட்சிகளும் கோஷ்டிகளும் எந்த முக்கிய பிரச்சினையிலும் அவ்வித குறைந்தபட்ச உடன்பாடு கொண்டதல்ல.

பின் தங்கிய வகுப்புகளுக்கு சலுகைகள் கூடாதென்றும் நிலச் சீர்திருத்த மசோதா வாபஸ் பெறப்பட வேண்டுமென்றும் மன்னத் பத்மநாபன் தமது போராட்டத்தை ஆரம்பித்தார். பிற்பட்ட வகுப்புகளுக்குச் சலுகைகள் வேண்டுமென்கிறது முஸ்லிம் லீக். இவ்விதம் இந்த கட்சிகளிடை கருத்து ஒற்றுமையே கிடையாது.

இந்தக் கட்சிகளின் முன்னணி சமூக விரோத சக்திகளை தூண்டிவிட்டு சொத்துநாசம் விளைவித்தும் சமாதானமாக வாழும் மக்களுக்கு அசௌகரியம் விளைவித்தும் வருகிறதே தவிர வேறில்லை.

இதற்குமாறாக, கேரள சர்க்காரே ஜனநாயக சக்திகளின் உண்மைப் பிரதிநிதியாகவிருக்கிறது. பத்து ஆண்டுகளுக்குப் பிறகு ஸ்திரமான ஆட்சியை ஏற்படுத்தியதும் தற்போதுள்ள சர்க்காரே.

இந்தச் சுயநல சக்திகளின் ஐக்கிய முன்னணியால் அரசியல் சட்டத்திற்கே ஆபத்து ஏற்பட்டிருக்கிறது. அப்படியிருக்கையில் அந்தச் சக்திகளைத் திரு. தேபரும் அவரது நண்பர்களும் துரதிருஷ்டவசமாக நம்பி கேரள சர்க்கார் மீது கிளர்ச்சி நடத்துகிறார்கள்.

கேரளசர்க்காரைப்பல தொழிற் சங்கங்கள் எதிர்ப்பதாக தேபர் கூறினர். ஆனால் ஐ.என்.டி.யு.சி. முதலிய தொழிற்சங்கங்களின் உறுப்பினர் தொகை 90 ஆயிரமே. ஏ. ஐ. டி. யு. சி. யூனியன்களில் 2 லட்சம் 74 ஆயிரம் தொழிலாளர் உறுப்பினராக இருக்கின்றனர்.

ஜூன் 29ந் தேதி ஐஎன்டியுசி முதலிய தொழிற்சங்கங்கள் வெளியிட்ட வேண்டுகோளின் பேரில் நடந்த வேலை நிறுத்தம் தெரிந்ததே. அந்த வேலைநிறுத்தம் பூரண தோல்வி அடைந்ததிலிருந்தே, அத்தொழிற் சங்கங்களுக்கு தொழிலாளரிடை எவ்வித செல்வாக்கு இருக்கிறதென்பது தெளிவாகும்.

தற்போதுள்ள மந்திரிசபை நீக்கப்பட வேண்டுமென்று கோரும் முனிசிபாலிடிகளையும் பஞ்சாயத்துகளையும் தேபர் குறிப்பிட்டார்.

1957 பிப்ரவரி முதல் 1959 பிப்ரவரி வரையில் பஞ்சாயத்துக்களில் 175 ஸ்தானங்களுக்காகத் தேர்தல் நடந்தது. இவற்றில் கம்யூனிஸ்ட் கட்சிக்கு 54 ஸ்தானங்களும் காங்கிரசிற்கு 34 ஸ்தானங்களும் கிடைத்தன. கம்யூனிஸ்ட் ஆதரவுடன் 22 சுயேச்சையாளர்களும் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

முனிசிபல் கவுன்சில் தேர்தலைப் பொறுத்தவரையில், 1957 ஏப்ரல் 5 தேதிக்கும் 1959 மே மாதத்திற்குமிடையில் 19 இடைத் தேர்தல்கள் நடந்தன கம்யூனிஸ்ட் கட்சி வசம் 10 ஸ்தானங்களும் எதிர்க்கட்சியினர் வசம் 9 ஸ்தானங்களும் உள்ளன. நிலைமை இவ்வாறிருக்க மக்களின் ஆதரவு யாருக்கு உண்டென்ற கேள்வி இயல்பாக எழுந்தது. தேபர், வக்கீல் சங்கங்களையும் பிரஸ்தாபித்தார். வக்கீல்கள் கம்யூனிஸ்ட் சர்க்காரிடமோ காங்கிரசிடமோ பிரியமுள்ளவரல்லர். கம்யூனிஸ்ட் கட்சி கோரும் பொருளாதார, சமுதாய மாறுதல்களை வக்கீல்கள் ஆதரிக்கவில்லை.

கடைசியாக, பத்திரிகைகளையும் தேபர் குறிப்பிட்டார். 30 தினசரிகளில் 26 தினசரிகள் கேரள சர்க்கார் ராஜினாமா செய்ய வேண்டுமென்று கோரின என்றும் தேபர் கூறினர். இப் பத்திரிகைகள் பொதுத்தேர்தலின்போதும் கம்யூனிஸ்ட் கட்சியை எதிர்த்தே வந்தன. இப்பொழுதும் எதிர்ப்பதில் ஆச்சரியமொன்றுமில்லை.

எதிர்க்கட்சிகள் நேரடி நடவடிக்கைகளில் ஈடுபட்டிருப்பதன் காரணம் இதுவே: கேரளத்தில் தோல்வி அடைந்த காங்கிரஸ் கட்சி, மத்தியில் அதிகாரத்திலிருக்கிறது. இக் கட்சிகள் நடவடிக்கையில் ஈடுபட்டால், மத்திய சர்க்கார் தலையிடும். காங்கிரஸ் தலைவர்கள் கேரள எதிர்க்கட்சிகளுக்கு உறுதிமொழியும் அளித்தனர்.

கேரளப் பிரதேச காங்கிரஸ் தலைவர்களுக்கும் அகில இந்திய காங்கிரஸ் தலைவர்களுக்கும் இடையே என்னநடந்ததென்பது முழுமையும் தெளிவாகவில்லை தேபர்வாய்மொழியாகச் சொன்னவற்றையே கேரள காங்கிரஸ் கமிட்டி தலைவர் திரு. சங்கரின் பெயரில் ஒரு அறிக்கையாக வெளியிட்டனர். அந்த அறிக்கையே காங்கிரஸ் மேலிடத்தின் அனுமதி என்று மதித்து ஜூன் 12-ந் தேதி முதல் கிளர்ச்சி நடத்தப்படுகிறது தேபரே அந்த அறிக்கைக்கு கர்த்தா என்பதை கேரள சட்டசபையில் எதிர்க்கட்சித் தலைவராகவிருக்கும், பி. டி. சாக்கோ காங்கிரஸ் அக்ராசனர் திருமதி இந்திரா காந்தியிடம் தெரிவித்தார். அந்த அறிக்கைக்கு தேபரே மூலகர்த்தா என்பதை திருமதி இந்திரா காந்திகூட மறுக்கவில்லை. எதிர்க்கட்சிகள் நடத்தும் நேரடி நடவடிக்கை இயக்கம் உண்மையில் வெற்றிபெற்று சர்க்கார் நிர்வாகம் இயங்காமல் ஸ்தம்பித்துவிடுமானால், மத்திய சர்க்கார் தலையிடுமென்று திரு. தேபரும் அவரது நண்பர்களும் கேரள காங்கிரஸ் தலைவர் சங்கருக்கும் மற்றவர்களுக்கும் உறுதிமொழி கூறியிருக்கின்றனரென்றே தீர்மானிக்க வேண்டும்.

## மேற்கு வங்க அரசாங்கத்தின் மீது குற்றப்பத்திரிகை

### கம்யூனிஸ்ட் கட்சி ஜூலை 30-ல் சமர்ப்பிக்கும்

கல்கத்தா, ஜூலை 27— மேற்கு வங்க மாகாண அரசாங்கத்தின் மீது குற்றப்பத்திரிகை சுமத்துவது என இந்திய கம்யூனிஸ்டு கட்சியின் மேற்கு வங்க மாநிலக் கிளை முடிவு செய்திருக்கிறது. இம்மாதம் 30-ம் தேதி மேற்கு வங்க கவர்னரிடம் குற்றப்பத்திரிகை சமர்ப்பிக்கப்படும்.

### ஜனாதிபதியிடம் சமர்ப்பிப்பார்கள்

இந்தியக் குடியரசுத் தலைவர் ராஜேந்திர பிரசாத் அவர்களிடம் அக்குற்றப்பத்திரிக்கையின் நகல் ஒன்றை 29-ம் தேதி சமர்ப்பிக்க ராஜ்ய சபையின் எதிர்க் கட்சித் தலைவர், தோழர் புபேஷ் குப்தாவும், மேற்கு வங்க சட்டசபை எதிர்க்கட்சித் தலைவர் தோழர் ஜோதிபாசும் நாளை டில்லிக்குப் புறப்படுவார்கள்.

## கர்நூல் முனிசிபல் கவுன்சிலர்கள் மேலும் நால்வர் ராஜினாமா!

### ஆந்திர சர்க்காரின் போக்குக்கு எதிர்ப்பு

கர்நூல், ஜூலை 27— கர்நூல் நகரசபையிலிருந்து மேலும் நான்கு கவுன்சிலர்கள் ராஜினாமா செய்துள்ளனர்.

நகரசபையின் நிதி, வரி சம்பந்தமான நிரந்தரக் கமிட்டியின் அப்பீல் அதிகாரங்களை நிலை நிறுத்துவதற்கு ஆந்திர காங்கிரஸ் சர்க்காரர் தவறியதையும், கர்நூல் நகரசபையின் குடிதண்ணீர் திட்டத்திற்கு 4 லட்ச ரூபாய் கடன்தருவதற்கு ஆந்திர சர்க்கார் மறுத்ததையும் கண்டிப்பதற்காகவே இவர்கள் ராஜினாமா செய்துள்ளனர்.

ஏற்கனவே இது சம்பந்தமாக நகரசபை சேர்மன் உட்பட 21 கவுன்சிலர்கள் ராஜினாமா செய்திருப்பது தெரிந்ததே.

## ஆசிரியருக்குக் கடிதங்கள்

### பிராட்வே (அவ)லட்சணம்

ஐயா

சென்னை நகரின் பல்வேறு "பெருமை"களில் பிராட்வே பகுதியும் ஒன்று. இந்த வீதியின் பெயர் எப்படியிருப்பினும் ஜன சந்தடியும் வண்டிகளின் போக்குவரத்தும் மிக அதிகமாக உள்ளது இப்பகுதி.

"டிராம்வே" இருந்ததற்கு அடையாளம் கூறும் வகையில் இத்தனை ஆண்டுகளாக மண்ணில் இற்றுப்போன தண்டவாளங்கள் இப்பொழுது அகற்றப் பட்டுவருகின்றன. இவ்வாறு அகற்றுவதில் முறைகேடான பல சம்பவங்கள் நடைபெற்றது ஒருபுறமிருக்கக் குறிப்பாக பிராட்வேயின் நிலை சென்னை நகரில் வாழும் மக்களின் சுகாதார வாழ்வுக்கு ஒரு அச்சுறுத்தலாக மாறிவிட்டிருக்கிறது.

சொகுசான கார்களில் பவனி வரும் "பெரு மக்கள் பிராட்வேயில் சவாரி வருவதை எவ்விதம் ரசிக்கின்றனரோ, நாம் அறியோம். ஆனால் இவ்வழியில் நடந்து செல்பவர்கள் சட்டக்கல்லூரியிலிருந்து பழைய பாலிடெக்னிக் கட்டடம் வருவது வரை மறுபிறப்பெடுக்கின்றனர் என்பது மட்டும் உண்மை. வண்டியோட்டுபவர்கள் பாதசாரிகளைப் புழுக்களாகவும் பூச்சிகளாகவும் நினைக்கின்றனர் என்பது ஒருபுறமிருக்க சாலைப் பராமரிப்பைக் கவனிக்கும் பொறுப்பேற்றிருப்பவர்கள் இவ்வழி நடப்போரை உயிருள்ள பிராணிகள் என்றுகூட நினைக்கவில்லை போலும்!

ஏற்கனவே பிராட்வே தூசிக்கு பெருமை அதிகம்; பிராட்வே ரோடில் உள்ள கூரான கற்களின் சிறப்பு சொல்லில் அடங்காதது. இப்பொழுதுள்ள செம்மண் சாலையில் நடப்போரைச் "செவ்விந்தியர்'களாக மாற்றி விடுகிறது; வெள்ளுடைகள் புது நிறம் பெறுகின்றன. அதிக முயற்சியின்றித் தலை மயிர் "டெக்னிக் கலர்" ஆக மாறுகிறது. மூக்கிலும் கண்களிலும் காதிலும் கழுத்துப்பட்டையிலும் சேரும் தூசியையும் மண்ணையும் திரட்டினால் மேட்டுக்குடி மக்கள் வாழத்தக்கவாறுள்ள சிறு வீடுகள் கட்டலாம்.

இதை யாரிடம் சென்று முறையிடுவது? பிராட்வே சாலைப் பராமரிப்பைக் கவனிக்கும் பொறுப்புள்ளவர்கள் இவ்விஷயத்தில் உடனடியான கவனம் செலுத்துவார்கள் என 'சிவிக் ஸென்ஸ்' உடைய "பிரஜைகள்' எதிர் பார்க்கின்றனர்.

எஸ். கனகராஜ்
சென்னை—1

●

### கோபால்டு மில் நிர்வாகத்தின் அநீதி

ஐயா,

திருப்பூருக்கு அருகில் கட்டப்பட்டிருக்கும் கோபால்டு மில்லில் தொழிற்சங்கத்திற்காக வேலை செய்யும் ஊழியர்கள் அநாவசியமாக, எவ்விதக் காரணமுங் காட்டப்படாமல் பழிவாங்கப் படுகின்றனர்.

உதாரணமாக, அண்மையில், ஸ்பின்னிங் டிபார்ட்மெண்டில் வேலை செய்யும் பழனிச்சாமி என்ற பெயருடைய நான்கு தொழிலாளிகள் (டோ. 4, 63, 70, 74) காரணமில்லாமல் 10-7-59ல் டிஸ்மிஸ் செய்யப்பட்டுள்ளனர். சர்க்காரின் தொழில் இலாகா இதை கவனித்து, தொழிலாளிகளை காரணங்காட்டப்படாமல் டிஸ்மிஸ் செய்யப்படுவதைத் தடுக்க நடவடிக்கை எடுக்குமா?

குயிலன்
திருப்பூர்.

●

### பீடித் தொழில் சட்டமும் சர்க்கார் போக்கும்

ஐயா,

சென்னை சர்க்கார், பீடித் தொழில் பாதுகாப்பு சட்டம் ஜூலை முதல் அமுலாகும் என்று தெரியப்படுத்தினார்கள். இந்த சட்டம் வந்தால தங்களுக்கும் 20 நாள் வேலைக்கு ஒருநாள் சம்பளத்துடன் லீவு கிடைக்கும்; திடீர், திடீர் என்று தொழிலாளிகள் வேலையிலிருந்து நீக்கப்படுவதும் நிற்கும்; ஒரு சில நல்ல சலுகைகள் கிடைக்கும், என்று தொழிலாளிகளுக்கு நம்பிக்கை பிறந்தது.

ஆனால் தொழிலாளிகள் ஏமாற்றமே அடைந்தனர். ஏனெனில் இந்த சட்டத்தை அமுல் நடத்துவதற்கு, சர்க்கார் இன்னும் அதிகாரிகளை நியமிக்கவில்லை. இதைப் பயன்படுத்திக் கொண்டு பீடிமுதலாளிகள் சட்டத்தின் ஷரத்துகளுக்கு எதிராகப் பல திட்டங்களை போட்டும் பீடிபாக்டரிகளை மூடவும், வெளி மாகாணங்களுக்குப் போய் பேக்டரிகள் திறக்கவும் முயற்சி செய்து வருகின்றனர்.

ஆகவே பீடிசட்டத்தை அமுல் நடத்துவதற்கு அதிகாரிகளை நியமிக்க சர்க்கார் உடனடியாக நடவடிக்கை எடுத்துக் கொள்வார்களா?

எஸ். கோவிந்தராஜன்,
கோவை.

# "பட்டத்தை கவர்னராக்கி நாடுகடத்த வேண்டும்"

## கலகக்காரர் கோட்டைக்குள் குத்துவெட்டு துவக்கம்

### டெல்லியில் காங்கிரசிடம் மன்னம் விதிக்கும் நிபந்தனைகள்

புதுடெல்லி, ஜூலை 26— கேரளத்தின் கலகத் தலைவர் மன்னம் புதுடெல்லிக்குக் காவடி எடுத்துச் சென்றுரலவா! அவர் தமது செல்லக் கொள்கைகளுக்கு ஆதரவு திரட்ட முயன்றுர். இந்த முயற்சியில் அவரது கள்ள உள்ளம் வெளியாகிவிட்டது. தனது விருப்பு வெறுப்புக்களை அவர் விஸ்தாரமாக எடுத்து விளம்பியிருக்கிறுர். இதன் விளைவாக மத்திய சர்க்கார், காங்கிரஸ் தலைவர்களிடையே பெரிய அளவு சந்தேகம் ஜனித்திருப்பதாகத் தெரிகிறது.

மன்னம் வெளியிட்டதாகக் கூறப்படும் சில கருத்துக்கள் கேரளக் காங்கிரஸ் தலைவர்களிடையில் நிராசை ஏற்படுத்தியுள்ளன. கம்யூனிஸ்ட்-எதிர்ப்பு என்ற ஒரு எதிர்மறை கோட்பாட்டை மட்டும் கைப்பிடித்து ஆற்றில் இறங்கியுள்ள எதிர்க்கட்சிகளுக்கு மன்னத்தின் திருவிளையாடல்கள் கசப்பும் வெறுப்பும் அளிப்பதில் விந்தை ஏது!

மத்திய சர்க்கார் தலையிட்டு மறு தேர்தல் நடத்த உத்தரவு பிறந்தால் கம்யூனிஸ்ட் மந்திரி சபையே காபந்து சர்க்காராக இருப்பதில் தமக்கு ஆட்சேபமில்லை என்று மன்னம் கூறியதாகத் தெரிகிறது.

பி. சோ. தலைவர் பட்டம் தாணுப்பிள்ளை (முதலமைச்சர் பதவக்காகப் பிறந்தவர் என்ற எண்ணம் உள்ளவர்) வேறு ஏதாவது ராஜ்யத்திற்கு கவர்னராக நியமிக்கப்பட்டுக் கேரளத்திலிருந்து நாடுகடத்தப்பட வேண்டும் என்பது மன்னத்தின் கருத்தாம்.

மன்னத்தின் தலைமையிலுள்ள நாயர்கள் எக்காரணம் கொண்டும் கத்தோலிக்கர்களுக்கு சட்டசபையில் 20 முதல் 30 சதவிகிதம் ஸ்தானத்திற்குமேல் அனுமதிக்க மாட்டார்கள் என்பதும் மன்னத்தின் பிடிவாதமாம்.

எக்காரணங் கொண்டும் பி. டி. சாக்கோ முதலமைச்சராக வருவதற்கு மன்னம் இடங் கொடுக்கப் போவதில்லை என்று திட்டவட்டமாகக் கூறியிருப்பதாகத் தெரிகிறது. கேரளப் பிரதேசக் காங்கிரஸ் தலைவர் சங்கர் கிண்ணத்தின் ஓரத்தில் இருக்கும் கடுகுபோல என்று மன்னம் வர்ணித்தாராம்.

பி. சோக்காரர்கள் சட்டசபையில் 50 ஸ்தானங்கள் வேண்டும் என்று தொல்லை கொடுக்கப் போகிறுர்கள் என்றும் அவர் முன் கூட்டியே கூறியிருப்பதாகத் தெரிகிறது. —நவஜீவன்

# சொந்த தொகுதியே தேபரை நிராகரிக்கிறது!

## "கேரள கிளர்ச்சிக்காரருடன் சேர்ந்து சதி புரிந்தவர்; பல சூழ்ச்சிகள் செய்தவர்"

## உபிலெடா நகர சபையின் கண்டனத் தீர்மானம்

### ஏற்கனவே தந்த வரவேற்பிதழும் வாபஸ் பெறப்பட்டது

புதுடில்லி, ஜூலை 26— கேரள பிரதேச காங்கிரசுடன் கூட்டு சேர்ந்து முன்னுள் காங்கிரஸ் அக்ராசனர் தேபர் சதி செய்ததை உபிலெடா நகரசபை வன்மையாகக் கண்டித்து தீர்மானங்கள் நிறைவேற்றியுள்ளது.

உபிலெடா, திரு. தேபரின் தொகுதி ஆகுமென்பது குறிப்பிடத்தக்கதாகும்.

உபிலெடா நகரசபையின் தலைவர் அத்தீர்மானங்களை இந்திய கம்யூனிஸ்டு கட்சி வார ஏடான 'நியூ ஏஜ்' ஆசிரியருக்குத் தெரிவித்தார். அந்நகரசபை தலைவர் வரைந்துள்ள கடிதம் வருமாறு:

உபிலெடா நகரசபையின் விசேஷக்கூட்டத்தில் நிறைவேற்றப்பட்ட இரு தீர்மானங்களின் பிரதிகளை 'நியூ ஏஜ்' ஆசிரியர் பார்வைக்கு அனுப்பியிருக்கிறேன்.

உபிலெடா, திரு தேபரின் தொகுதியாகும். இங்கிருந்துதான் தேபர், சௌராஷ்டிர சட்டசபைக்குத் தேர்ந்தெடுக்கப்பட்டார். அவரது சொந்த தொகுதியின் பிரதிநிதிகள் அவரது கொள்கையை நிராகரித்ததுடன் மட்டுமன்றி கேரள பிரதேச காங்கிரசுடன் கூட்டு சேர்ந்து அராஜகக் கிளர்ச்சி நடைபெறுவதற்குச் சதி புரிந்ததையும் கண்டிக்கின்றனர். சென்ற காலத்தில் தேபருக்கு உபிலெடா நகரசபை வரவேற்பு பத்திரமொன்று வாசித்துக் கொடுத்தது. அந்த வரவேற்புப் பத்திரத்தை நிகழ்ச்சிக் குறிப்புகளிலிருந்து நீக்கிவிடவும் இந்நகரசபை முடிவு செய்துள்ளது.

இவை மிக்க முக்கியமான தீர்மானங்கள். இத் தீர்மானங்களை நன்றாக விளம்பரப்படுத்துமாறு கேட்டுக்கொள்கிறேன்".

#### சொந்தத் தொகுதியின் கண்டனம்

உபிலெடா நகரசபையின் கடிதம் 'நியூ ஏஜி'ல் பிரசுரிக்கப்பட்டிருக்கிறது. அதோடு அக்கடிதம் குறித்து 'நியூ ஏஜ்' எழுதியிருப்பதாவது.

சௌராஷ்டிரத்திலுள்ள உபிலெடா தொகுதியே தேபரை சட்டசபைக்குத் தேர்ந்தெடுத்தது. தேபர் மேலிடத்தைத் திருப்தி செய்ய உபாயம் தெரிந்தவர். ஆகவே, சௌராஷ்டிர முதல் அமைச்சர் பதவி முதன் முறையாக அவருக்குக் கிட்டியது. உபிலெடா நகரசபை உபசாரப் பத்திரம் வாசித்துக் கொடுத்தது.

காங்கிரஸ் அக்ராசனர் பதவி காலியாயிற்று. தேபர் தக்க உபாயங்களால் அப் பதவியையும் பெற்றுர். அவரது காலத்தில் காங்கிரஸின் செல்வாக்கு அதிகம் தேய்ந்துவிட்டது தெரிந்ததே. கேரளத்தைக் காங்கிரஸ் இழந்தது தேபர் சும்மாயிருக்கவில்லை. கேரளத்தில் சுற்றுப் பிரயாணம் செய்து கேரள சர்க்காருக்குப் பாதகமான அபிப்பிராயங்களைக் காங்கிரஸ் காரியக் கமிட்டிமீது திணித்தார். அவ்வபிப்பிராயங்களைக் காரியக் கமிட்டி விரும்பவில்லை.

அண்மையில் தேபர், கேரள கிளர்ச்சிக்காரர்களுடன் சதி புரிந்து, தூண்டிவிட்டதால் பலாத்கார இயக்கம் உருவாயிற்று

#### உபிலெடா நகரசபை தீர்மானம்

தேபர் தமது தொகுதியான உபிலெடாவை மறந்துவிட்டார். ஆனல் உபிலெடா அவரை மறக்கவில்லை.

உபிலெடா நகரசபை ஜூலை 17-ந் தேதி கூடி கேரளத்தில் அரசியல் சட்டத்திற்குப் புறம்பான, ஜனநாயக விரோதமான கிளர்ச்சியைக் கண்டித்தது. கேரளத்தில் தலையீடு கூடாதெனவும் பிரதமர் நேருவுக்கும் காங்கிரஸ் மேலிடத்திற்கும் அறிவுறுத்தியது.

#### கிளர்ச்சிக்குப் பச்சைக்கொடி காட்டியவர்

அந்நகரசபை பின்வருமாறு தேபரையும் வன்மையாகக் கண்டித்தது:—

"கேரளக் கிளர்ச்சி ஜனநாயக விரோதமானது மட்டுமன்றி, அரசியல் சட்டத்திற்குப் புறம்பானதுமாகும்; வகுப்புவாதிகளும் ஏகபோக உரிமையாளருமே அக்கிளர்ச்சியை நடத்தி வருகின்றனர் அவ்விதக் கிளர்ச்சியில் சேர கேரள காங்கிரஸிற்கு தேபர் பச்சைக்கொடிகாட்டினர். நேரடி இயக்கத்தில் சேரும்படி தேபர் அனுமதி கொடுத்தாரென்று கேரள காங்கிரஸ் தலைவர் சாக்கோவே பகிரங்கமாக அறிவித்தார்.

தேபர் அவ்விதம் பச்சைக் கொடி காட்டியதால் கேரளத்தில் பலாத்கார சூழ்நிலை ஏற்பட்டிருப்பதுடன் நமதுநாட்டில் பார்லிமெண்டரி ஜனநாயக ஆட்சிமுறைக்கே அபாயம் ஏற்பட்டிருக்கிறது.

#### பெரும் சூழ்ச்சிக்காரர்

சௌராஷ்டிர அரசியல் வட்டாரங்களில் பெரும் சூழ்ச்சிகள் புரிந்து கெட்ட பெயர் எடுத்தவர் திரு. தேபர். சௌராஷ்டிரத்தின் முதல் அமைச்சராக இருந்தபோது அவருக்கு இக்கெட்ட பெயர் ஏற்பட்டது. சூழ்ச்சிகள் புரியும் அனுபவத்தை அவர் காங்கிரஸ் மேலிடத்தில் பதவி ஏற்றதும் நாடு முழுவதிலும் பிரயோகம் செய்துவருகிறுர்.

"அவர் பச்சைக்கொடி காட்டியிருந்திராவிட்டால், கேரளக் கிளர்ச்சி நீண்ட காலத்திற்கு முன்பே பிசுபிசுத்திருக்கும்; பிரதமர் நேருவும் அக்கிளர்ச்சியைக் கண்டித்திருப்பார்.

#### மானக்கேடான செய்கைகள்

தேபரின் மானக்கேடான சூழ்ச்சிகளே கேரளத்தில் தற்போது நடக்கும் கிளர்ச்சிக்குப் பெரும் அளவு காரணமாகுமென்று உபிலெடா நகரசபை கருதுகிறது. ஆகவே அவரை முன்பு சட்டசபைக்குத் தேர்ந்தெடுத்த உபிலெடா வாக்காளரின் பிரதிநிதிகள் அடங்கிய இந்நகரசபை, கேரளத்தில் அவரது நடத்தையைப் பகிரங்கமாகக் கண்டிக்கக் கடமைப்பட்டிருக்கிறது.

வன்மையான கண்டனத்தைத் தெரிவிக்கும் வாயிலாக இந்நகரசபை அவருக்கு முன்பு அளித்த உபசாரப்பத்திரத்தை அலுவலகத்திலிருந்தே அகற்றிவிட இந்நகரசபை முடிவு செய்கிறது."

# காங்கிரஸ் மகஜரின் அரிச்சந்திரத்தனம்

## 'சங்கர் பிராண்டு' சத்தியத்துக்கு இன்னொரு உதாரணம்

### பட்டணக்காடு கத்திக்குத்து சம்பவம்: வி. கே. விஸ்வநாதன் அறிக்கை

எர்ணுகுளம், ஜூலை 27— ஆலப்புழை ஜில்லா, சேர்தலை தாலூகாவைச் சேர்ந்த பட்டணக்காடு கம்யூனிஸ்ட் கட்சிக் கிளை தனது கட்சிக்காரர்களுக்கு ஆதரவாக "தீர்ப்பு" அளிக்கும் வகையில் நீதி வழங்கும் அதிகாரங்கள் கொண்டு இயங்குகிறது என்று கேரள பிரதேச காங்கிரஸ் ஜனாதிபதியிடம் அளித்த மகஜரில் கூறியிருப்பது ஆதாரமற்றது என பட்டணக்காடு கம்யூனிஸ்ட் கட்சிக் கிளையின்செயலாளர் தோழர் வி. கே. விஸ்வநாதன் மறுத்துள்ளார்.

பட்டணக்காடு பஞ்சாயத்தைச் சேர்ந்த ஹஸனர் என்பவர் சொத்து தகராறு சம்பந்தமாக கம்யூனிஸ்ட் கட்சி 'ஸெல்' (காங்கிரஸ் மகஜரில் இவ்வாறு தான் குறிப்பிட்டுள்ளது) முன்பு ஆஜராக மறுத்ததாகவும் அதன் பேரில் கட்சியின் உத்தரவின்படி அவர் கத்தியால் குத்தப்பட்டதாகவும் காங்கிரஸ் மகஜரில் கூறப்பட்டிருந்தது.

"ஹஸனர் என்ற பெயருடைய யாரும் பட்டணக்காடு பஞ்சாயத்தில் இருக்கவுமில்லை, மகஜரில் கூறப்பட்டிருப்பது போன்ற தகராறும் ஏற்படவில்லை ஆனல் இந்த மகஜர் வெளியிடப்பட்டபின விசாரித்ததில் ஹஸன் என்ற நபர் ஒரு முந்திரி மர உரிமை மீது கிருஷ்ண ஷெனாய் என்ற நபருடன் தகராறு செய்தார் எனவும் ஷெனாய் அந்த மரத்தை வெட்டிவிட்டார் எனவும் ஹஸன் தனது உரிமையை வற்புறுத்தவே உள்ளூர் முஸ்லிம் லீக் தலைவர், முகம்மது இத்தகராறில் தலையிட்டு தீர்த்து வைத்தார் எனவும் தெரிய வந்தது.

"காங்கிரஸ் மகஜரைப் பார்ப்பதுவரை இச்சம்பவம் பற்றி எனக்கு ஒன்றும் தெரியாது. கம்யூனிஸ்ட் கட்சிக்கும் இதில் யாதொரு விதமான சம்பந்தமும் இருக்கவில்லை. கத்திக்குத்துச் சம்பவம் எதுவும் நடக்கவேயில்லை' எனத் தோழர் விஸ்வநாதன் தனது அறிக்கையில் கூறியுள்ளார்.

# இடைக்காலத் தேர்தல் யோசனை ஏற்பது ஜனநாயகத்துக்கு விடை கொடுப்பதாகும்

## கேரள எதிர்க்கட்சிகளின் பலாத்கார நடவடிக்கைகளுக்கு ஆந்திர ஜனநாயகவாதிகள் கண்டனம்

ஹைதராபாத், ஜூலை 24— ஆந்திர அசெம்பிளியின் முன்னாள் சபாநாயகர் திரு என். வெங்கடரமணய்யா பத்திரிகைகளுக்கு விடுத்துள்ள அறிக்கை யொன்றில், கேரள அரசாங்கத்துக்கு எதிராக நடைபெறும் வன்முறைக் கிளர்ச்சியைக் கண்டித்துள்ளார். 'கேரளத்தில் இடைக்காலத் தேர்தல் வேண்டுமெனக் கோருவது ஏற்கத்தக்கதல்ல. இந்தயோசனையை காங்கிரஸ் மேலிடம் தள்ளிநிற்க வேண்டும். சட்ட விரோதமான முறைகளாலும் வன்முறை நடவடிக்கைகளாலும் அரசியல் சட்டப்படி அமைக்கப்பட்டதொரு அரசாங்கத்தை வெளியேற்ற முயல்வது நமது புனிதமான அரசியல் சட்டத்தைக் கேலிக்கூத்தாக மாற்றுவதாக முடியும்" என்று அவர் அந்த அறிக்கையில் கூறியுள்ளார்.

#### அனந்தப்பூர் வக்கீல்கள் எதிர்ப்பு

அனந்தப்பூர் நகரின் முக்கியமான வழக்கறிஞர்கள் 44 பேர் கூட்டாக விடுத்துள்ள அறிக்கையொன்றில், கேரளத்தில் செயற்கையாக உண்டாக்கப்பட்ட முறையற்ற கிளர்ச்சியை வைத்துக்கொண்டு இடைத் தேர்தல்கள் திணிக்கப்படுமாயின் அது இந்தியாவில் ஜனநாயகக் கொள்கைகளுக்கு விடைகொடுப்பதாக அமையும் எனக் கூறியிருக்கின்றனர்.

நரசப்பூர் (மேற்கு கோதாவரி ஜில்லா) வழக்கறிஞர்கள் 16 பேர், நரசராவ்பேட்டை (குண்டூர்) வழக்கறிஞர்கள் 20 பேர், ஹிந்துபூரைச் சேர்ந்த 36 கவுன்சிலர்கள், வழக்கறிஞர்கள், டாக்டர்கள் ஆகியோர், பீமாவரம் வழக்கறிஞர்கள் ஆகியோரும் கேரளக் கிளர்ச்சியைக் கண்டித்தும் மத்திய தலையீட்டு யோசனையைக் கண்டித்தும் ஜனாதிபதிக்கு எழுதியுள்ளனர்.

#### தந்திகளும், கையெழுத்துக்களும்

கடப்பை ஜில்லாவைச் சேர்ந்த ஜம்மலமடுகு தாலூகாவில் ஒரே நாளில் மட்டும் கேரள அரசாங்கத்துக்கு ஆதரவு கூறும் மகஜரில் 1500-க்கு மேற்பட்டவர்களின் கையெழுத்துகள் வாங்கப்பட்டன. இடைத் தேர்தல் யோசனைக்கு எதிர்ப்பு தெரிவிக்கும் இம்மகஜர் பிரதமமந்திரிக்கு அனுப்பப்பட்டது. அத்துடன் 150 கார்டுகளும் 10 தந்திகளும் அனுப்பப்பட்டன.

அனந்தப்பூர் ஜில்லாவைச் சேர்ந்த புக்கா பட்டணத்திலிருந்து 100 கார்டுகள் அனுப்பப்பட்டன, மத்திய தலையீட்டு யோசனையை எதிர்க்கும் 100 பேர் கையெழுத்திட்ட மகஜர் மூன்று பட்டபார்த்தி கிராமத்திலிருந்து (அனந்தப்பூர் ஜில்லா) பிரமுகர்கள் அனுப்பியுள்ளனர். கடப்பை ஜில்லாவைச் சேர்ந்த ராயசோடி தாலூகாவிலிருந்து 3000 கையெழுத்துக்கள் அடங்கிய மகஜரும் 60 கார்டுகளும் இதுவரை அனுப்பப்பட்டுள்ளன. பலவேறு அரசியல் கருத்துக்களை உடைய 200 பிரமுகர்கள் எந்த நிலையிலும் கேரளத்தில் மத்திய தலையீடு கூடாதென வற்புறுத்தி பிரதமருக்கு தனித்தனியாக எழுதியுள்ளனர்.

#### பஞ்சாயத்துக்கள் தீர்மானம்

கேரள அரசாங்கத்துக்கு முழு ஆதரவு தெரிவித்தும் கேரளத்தில் எந்த நிலையிலும் மத்திய தலையீடு கூடாதென வற்புறுத்தியும் இடைத் தேர்தல் யோசனையைக் கண்டித்தும் ஆந்திர பிரதேசத்தின் பல்வேறு பகுதிகளிலுமுள்ள நூற்றுக்கணக்கான பஞ்சாயத்துகள் தீர்மானங்கள் நிறைவேற்றியுள்ளன.

கோதப்பட்டணம் (குண்டூர் ஜில்லா) வடலி (கிருஷ்ணு ஜில்லா) வீரபள்ளி (கடப்பை) துன்னேபாடு, சம்மேபள்ளி, காதனேனி, ஏராகுடி, ஓடிவேடு, கோகுடு பாலம், போலிமேரபள்ளி, பிராமண ஏராங்குடி, குன்னி குண்டலம், கர்னூதலே, அரிவீடு (கடப்பை ஜில்லா) அல்லூரு, பூர்ணி (நெல்லூர்), சிஞ்ஜநாடா, சாமல் ரகதா (நெல்லூர் ஜில்லா) இதமாபுதி, பிராமணதேவம் (மேற்கு கோதாவரி ஜில்லா), இந்துபூர் (நெல்லூர்) முதலிய பஞ்சாயத்துகளின் தலைவர்கள் ஜனாதிபதிக்கும் பிரதமருக்கும் கேரளத்தில் எத்தகைய மத்திய தலையீட்டையும் எதிர்ப்பதாக உத்தியோகபூர்வமான முறையில் கடிதங்கள் எழுதியுள்ளனர்.

#### ஜனநாயக கட்சித் தலைவர் எதிர்ப்பு

"நமது ராஜ்ய அசெம்பிளியில் ஒரு வாக்கு மெஜாரிடியில் முடிவுகள் எடுக்கப்பட்டதில்லையா?" என வாரங்கல் ஜில்லா ஜனநாயகக் கட்சித் தலைவர் டி. ஹயகிரிவாசாரி கேட்டார். வாரங்கல் நகரில் பகுத்தறிவாளர் சங்கத்தின் சார்பில் ஏற்பாடு செய்யப்பட்டிருந்த கேரளம் பற்றிய கருத்தரங்கில் அவர் பேசினர். கர்நூலில் ஆந்திர ராஜ்யத் தலைநகர் அமைக்கப்படுவதைப் பற்றிய முடிவை அவர் குறிப்பிட்டார்,

"கேரளத்தில் எதிர்க்கட்சிகளின் கிளர்ச்சி அமைதியான முறையில் நடத்தப்படுகிறதென கூறப்படுவது ஆச்சரியமாக இருக்கிறது. பள்ளிகளுக்குத் தீ வைத்தல், பஸ் டயர்களை வெட்டுதல், பள்ளி செல்லும் குழந்தைகளை வன்முறையில் தடுத்து நிறுத்தல் முதலிய காரியங்களின் பொருள் என்ன? இவை பலாத்காரமற்ற அஹிம்சா பூர்வமான போராட்டத்தின் சின்னங்களா? என அவர் கேட்டார்.

# கேரளக் கலவரங்களுக்கு காங்கிரஸ் மேலிடத்தின் ஆதரவு

## கம்யூனிஸ்ட் கட்சி தலைவர் இஜட். ஏ. அகமது குற்றச்சாட்டு

அலகாபாத், ஜூலை 26— கேரளத்தில் கம்யூனிஸ்ட் சர்க்காருக்கெதிராக நடைபெறும் கிளர்ச்சிக்குக் காங்கிரஸ் மேலிடம் ஆசி கூறி, அதற்கு ஊக்கமூட்டி வருகிறது, என்று இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சியின் மத்திய நிர்வாகக் கமிட்டி உறுப்பினர் டாக்டர் இஜட். ஏ. அகமது இன்று குற்றம் சாட்டினர். காங்கிரஸ் மேலிடத்தின் ஆசியும், ஆதரவும் இல்லாமலிருக்குமேயானல், அந்த இயக்கம் இரண்டு வாரங்களுக்குக்கூட நீடித்திருக்க முடியாது என்றும் தோழர் அகமது இன்று மாலை இங்கு ஒருபெரிய பொதுக்கூட்டத்தில் பேசுகையில் கூறினர்.

#### கூக்குரல் விநோதம்

இதில் மிகவும் ருசிகரமான ஒரு விஷயம் என்னவெனில், கேரளத்தில் கலவரங்களை உண்டு பண்ணும் அதே நபர்களே கேரளத்தில் சட்டமும், ஒழுங்கும் குலைந்துவிட்டதென்றும் அதனல் மத்திய சர்க்கார் தலையிட வேண்டுமென்றும் கூறி வருகிறுர்கள் என்றும் டாக்டர் அகமது கூறினர்.

தோழர் அகமது அண்மையில் கேரளத்தில் சுற்றுப்பிரயாணம் செய்துவிட்டு இங்கு திரும்பினர். கேரளத்தில் தான் நேரில் கண்ட அனுபவத்தைப் பற்றி அவர் கூறுகையில், "அலகாபாத் எப்படி யிருக்கிறதோ, அதேபோல் அவ்வளவு சகஜ நிலையில்தான் கேரளமும் இருக்கிறது" என்றுர் கேரளத்தில் ரோமன் கத்தோலிக்கர்கள் பெருவாரியாக உள்ள இரண்டு, மூன்று ஜில்லாக்களில் தான் இந்தக் கிளர்ச்சி நடைபெறுகிறது என்றுர்.

#### கூட்டுறவு விநோதம்

"நான் அண்மையில் கேரளத்திற்குச் சென்றபோது, வெளியில் காங்கிரஸ் தலைவர்கள் என்ன கூறிவருகிறுர்களோ அதற்கு நேர் எதிரான விஷயங்கள் அங்கு நடைபெறுவதைப் பார்த்தேன். கேரள மாணவர்கள் தூண்டிவிடப்பட்டு, சர்க்கார் எதிர்ப்பு இயக்கத்தில் அவர்கள் ஈடுபடுத்தப்பட்டுள்ளனர். அங்கு காங்கிரஸ், முஸ்லீம் லீக், பிரஜா - சோஷலிஸ்ட் கட்சி ஆகியவைகளெல்லாம் விநோதமான ஒரு கூட்டணியில் இணைந்துள்ளன. இந்த மூன்று கட்சிகளின் கொடிகளும் ஒன்ருக இணைக்கப்பட்டு எடுத்துச் செல்லப்படுவதும் மிகவும் வியக்கத்தக்கதாயுள்ளது. கம்யூனிஸ்ட் மந்திரிசபையைக் கவிழ்ப்பதற்காக மிகவும் கேடுகெட்ட வகுப்புவாதம் கிளப்பப்பட்டு வருகிறது. இந்தியா பூராவிலும் முஸ்லீம் லீகை மீண்டும் உயிர்ப்பிப்பதற்கு உதவி செய்வோம் என்று பொறுப்புள்ள காங்கிரஸ் தலைவர்கள் முஸ்லீம் லீகுக்கு பகிரங்கமாகவே வாக்குறுதி கொடுத்துள்ளனர்," என்று அகமது கூறினர்.

#### சவால்! இரண்டு மாதம் நீடிக்குமா?

"கேரளத்தில் மீண்டும்தேர்தல் நடத்துவது பிரச்சினையைத் தீர்க்கப்போவதில்லை. கம்யூனிஸ்ட் மந்திரி சபைக்கு ஒரு மாற்ருக, காங்கிரஸ், முஸ்லீம் லீக், பி சோ., ஆகியவைகளின் ஒரு கூட்டு மந்திரிசபையை ஏற்படுத்துவதற்கு முயற்சி செய்யலாம். ஆனல் அத்தகைய மந்திரி சபை இரண்டு மாதங்கள்கூட நீடிக்காது", என்று அகமது பலத்த கரகோஷத்திற்கிடையில் கூறினர்.

'கேரளத்தில் நடைபெறுவதற்குப் பழிக்குப் பழி வாங்கும் முறையில் கம்யூனிஸ்ட் கட்சி காங்கிரஸ் ஆளும் ராஜ்யங்களில் அத்தகைய கிளர்ச்சிகளில் ஈடுபடப்போவதாகக் கூறப்படும் கூற்றுக்களை தோழர் அகமது மறுத்தார். பழிக்குப் பழி என்ற பேச்சே கிடையாது. கேரளத்தில் ஒரு இயக்கத்தைக் கண்டிக்கும் நாங்கள், அதே இயக்கத்தை வேறு இடங்களில் ஆதரிக்க முடியாது என்று கூறினர்.

கேரள மந்திரிசபையை வெளியேற்றுவதை நோக்கமாகக் கொண்ட இந்த ஜனநாயக விரோத முன்னுதாரணம் நிலைநிறுத்தப்படுமேயானல், பிறகு, எந்த நபரும் ஒரு இரண்டாயிரம் ஆட்களைச் சேர்த்து சட்டபூர்வமாக ஏற்படுத்தப்பட்டுள்ள ஒரு மந்திரி சபையைக் கவிழ்ப்பதற்காக ஒரு கிளர்ச்சியைத் துவக்க முடியும் என்றும் டாக்டர் அகமது கூறினர்.

## இடைக்கால பெர்லின் ஒப்பந்தம்

ஜெனிவா, ஜூலை 27— "ஒரு இடைக்கால பெர்லின் ஒப்பந்தத்தின் நகலைத் தயார் செய்வதற்கு சோவியத் யூனியனும், மேற்கு வல்லரசுகளும் இசைந்துள்ளன என்று பிரெஞ்சு அரசாங்க அதிகாரி ஒருவர் தெரிவித்தார். புதன்கிழமை அன்று நகல்கள் பரிமாறிக்கொள்ளப்படும்.

## காசி மாணவர்கள்மீது எடுத்த ஒழுங்கு நடவடிக்கை வாபஸ் பெறப்படும்

### பல்கலைக் கழக நிரந்தரக் கமிட்டி முடிவு

காசி, ஜூலை 27— காசி ஹிந்து பல்கலைக் கழகத்தைச் சார்ந்த நான்கு மாணவர்கள் மீது எடுத்திருந்த ஒழுங்கு நடவடிக்கையை வாபஸ் பெறுவதென்று, நேற்று கூடிய பல்கலைக் கழக நிரந்தரக கமிட்டி முடிவு செய்தது. சென்ற ஆண்டு முதலியார் கமிட்டியின் அறிக்கையில் குறிப்பிடப்பட்டிருந்த சில குற்றச்சாட்டுகளை எதிர்த்து மாணவர்கள் போராட்டம் நடத்தியது நினைவிருக்கலாம்.

அம் மாணவர்கள் எழுத்து மூலம் மன்னிப்பு எழுதிக் கொடுத்தால் பல்கலைக்கழகத்தில் மீண்டும் சேர்த்துக்கொள்ளப் படவேண்டும் என்றும் அக் கமிட்டி கூறியிருக்கிறது கமிட்டி மாணவர்களின் நன்னடத்தைக்கு பல்கலைக் கழகப் பொறுப்பாளர்களுக்கு உறுதியளித்திருக்கிறது.

மாணவர்களின் போராட்டத்தின் காரணமாக பல்கலைக் கழகம் இரண்டு மாத காலம் மூடப்பட்டிருந்ததை வாசகர்கள் அறிவார்கள்.

# மத்திய சர்க்கார் தலையிடும் என்பதாலே கிளர்ச்சி நீடிக்கிறது

## ஜனதிபதிக்கு நாகபுரி வக்கீல்கள் மகஜர்

நாகபுரி, ஜூலை 27— இன்று 120 நாகபுரி வழக்கறிஞர்கள் ஜனதிபதி ராஜேந்திர பிரசாதுக்கு ஒரு மகஜர் அனுப்பியுள்ளனர். கேரளம் பற்றி அந்த மகஜரின் சுருக்கம் வருமாறு:

பொதுத் தேர்தலில் தோற்கடிக்கப்பட்ட எதிர்க்கட்சிகள் ஒரு சர்க்காரின் கொள்கைகளை மாற்றுவதற்காக கிளர்ச்சி நடத்தலாம்; அவ்விதமின்றி சட்டபூர்வமாக அதிகாரமேற்று சட்டசபையில் பெரும்பான்மையோரின் ஆதரவுடன் இயங்கும் ஒரு சர்க்காரை கவிழ்ப்பதற்கு கிளர்ச்சி நடத்துவது நமது அரசியல் சட்டத்தின் லட்சியத்திற்கே முரணனது; அவ்வித கிளர்ச்சி அரசியல் சட்டபூர்வமான ஜனநாயக ஆட்சிக்கே ஆபத்து விளைவிப்பதாகமுடியும்.

மத்திய சர்க்கார் தலையீடு ஏற்படுமென்ற நம்பிக்கைக்கு இடமிருப்பதால், கேரள சர்க்காரைக் கவிழ்க்கவேண்டுமென்ற ஒரே லட்சியமுடைய ஜனநாயக விரோதமான, அரசியல் சட்ட விரோதமான இக் கிளர்ச்சி நீடிக்கிறது. மத்திய சர்க்கார் தலையீடு இருக்காதென்றுல் கிளர்ச்சி நின்றுவிடும்.

கேரள சர்க்கார் வாக்காளருக்குக் கொடுத்துள்ள தேர்தல் உறுதிமொழிகளையும் வேலைத் திட்டங்களையும் நிறைவேற்ற வேண்டும். ஆகவே கேரள சர்க்கார் 5 ஆண்டுகள் நீடித்திருக்க உரிமை பெற்றதேயாகும். இந்த உரிமைக்குக் குந்தகமான நடவடிக்கை எதுவும், ஆரம்பநிலையிலுள்ள நமது ஜனநாயகத்திற்கு ஆபத்து ஏற்படத்தக்க முன்மாதிரியை ஏற்படுத்தும்.

இந்த மகஜரைச் சமர்ப்பிக்கும் வக்கீல்களான எங்களில் பெரும்பாலோர் கம்யூனிஸ்டுகள் அல்ல. ஆனல் கேரளத்தில் அமைதி ஏற்படுத்தும்படி கேரள கிளர்ச்சியில் சம்பந்தப்பட்ட கட்சிகளுக்கு அறிவுறுத்தும்படித் தங்களை வேண்டிக்கொள்கிறோம்.

## கலவரத்துக்கு பம்பாய் முதலாளிகள் பணம்

பம்பாய், ஜூலை 27— கேரளத்தில் விமோசனக் காரர்கள் நடத்தும் கலவரத்துக்குக் குறைந்தது ரூ 50 000 அளிக்கப்படும் என மாஜி கவர்னர் கே. எம். முன்ஷி இங்கு மன்னத் பத்மநாபன் பேசிய கூட்டமொன்றில் அறிவித்தார்.

## அலகாபாத் கலெக்டர் ஜாகை முன்பு ஆர்ப்பாட்டம்

### காங்கிரஸ் சீர்கேடான ஆட்சிக்குக் கண்டனம்

அலகாபாத், ஜூலை 27— உத்திரபிரதேசத்தில் காங்கிரஸின் சீர்கேடான ஆட்சியை ஆட்சேபிக்க ஜில்லா கலெக்டர் ஜாகை முன்பு இன்று பிரஜா சோஷலிஸ்ட் கட்சியின் 400-க்கு மேற்பட்ட ஊழியர்கள் ஆர்ப்பாட்டம் நடத்தினர்.

உ. பி. சட்டசபையில் சர்க்கார் மீது நம்பிக்கையில்லாத் தீர்மானம் ஒன்றையும் பிரஜா சோஷலிஸ்ட் கட்சி கொண்டுவரப்போகிறது. அத்தீர்மானத்தை ஆதரிக்கவே இந்த ஆர்ப்பாட்டம் ஏற்பாடு செய்யப்பட்டது.

பி. சோ. ஊழியர்கள் கலெக்டர் ஜாகையின் முன்பு கூடி, சர்க்காரைக் கண்டித்து கோஷங்கள் கிளப்பினர். கலெக்டர் இல்லை. அவருக்குப் பதில் அடிசனல் ஜில்லா மாஜிஸ்டிரேட்டும் நகர மாஜிஸ்டிரேட்டும் ஆர்ப்பாட்டம் நடத்தியவர்களைச் சந்தித்து ஜில்லா போலீசாரின் ஊழல்களையும் அடக்குமுறையையும்பற்றி விசாரிப்பதாகக் கூறினர், (பிடிஐ)

# ஆந்திர காங்கிரஸ் அரசாங்கத்தின் விசித்திர ஜனநாயகம்

## இரு மாதங்கள் ஆகியும் பஞ்சாயத்து தேர்தல் முடிவுகள் அறிவிக்கப்படவில்லை

### கம்யூனிஸ்டுகள் வெற்றி பெற்றதால் அதை அறிவிக்க விருப்பமில்லையா?

ஹைதராபாத், ஜூலை 27— அண்மையில் நடைபெற்ற பஞ்சாயத்து தேர்தல்களில் கம்யூனிஸ்டுகள் வெற்றிபெற்ற காரணத்தால் தேர்தல் நடைபெற்று இரு மாதங்களாகியும் முடிவுகள் அறிவிப்பதை ஆந்திர அரசாங்கம் நிறுத்திவைத்துள்ளது என அதிகார பூர்வமாகத் தெரிகிறது.

ஆந்திர பிரதேச காங்கிரஸ் அரசாங்கத்தின் பாரபட்ச நடைமுறைக்கு இது மற்றுமொரு எடுத்துக்காட்டு.

கம்மம் ஜில்லாவில் ரேபக கொம்மு பஞ்சாயத்துத் தேர்தல் 16-5-59ல்நடைபெற்றது. இந்தக் கிராமம் முழுவதுமே பல உறுப்பினர்கள் அடங்கிய தொகுதியாக அமைக்கப்பட்டது. 1.200 வாக்குகள் பதிவு செய்யப்பட 21 மணி நேரம் பிடித்தது. ஏனெனில் ஒவ்வொரு வாக்காளரும் 10 உறுப்பினர்களைத் தேர்ந்தெடுக்க 10 வாக்குகளைப் பதிவு செய்ய வேண்டியிருந்தது. இருப்பினும் மக்கள் பொறுமையாக இருந்து தங்கள் பஞ்சாயத்து சபையைத் தேர்ந்தெடுத்தனர். ஆனல் இதுவரை தேர்தல் முடிவுகள் அறிவிக்கப்படவில்லை. இதற்கான காரணம் மொத்தமுள்ள 10 இடங்களில் 8 இடங்களில் கம்யூனிஸ்டுகள் வெற்றி பெற்றிருப்பதே.

தேர்தல் முடிவுகளை அறிவிக்க வேண்டாமென மேலிடத்திலிருந்து உத்தரவு வந்திருக்கிறதாம்! சம்பந்தப்பட்ட அதிகாரிகளிடம்தோழர் முகம்மது தாசில் முறையிட்டும் இதுவரை எந்த விதமான நடவடிக்கையும் எடுக்கப்படவில்லை.

# கேரளத்தில் தலையிடாவிடில் மத்திய சர்க்காரையும் எதிர்த்துப் போராடுவாராம்!

## "முதலில் இந்தியர்கள்; பிறகே கட்சிக்காரர்கள்"

### சங்கரின் வெறி உச்சமடைகிறது

பம்பாய், ஜூலை 27— "கேரளத்தில் மத்திய அரசாங்கம் தலையிட்டு கம்யூனிஸ்ட் அரசாங்கத்தை வெளியேற்றுவிடில் கம்யூனிஸ்டுகளை மட்டுமின்றி மத்திய அரசாங்கத்தையும் எதிர்த்துப் போராடும் நிலைக்கு கேரள மக்கள் நிர்ப்பந்திக்கப்படுவர். இத்தகைய நடவடிக்கை எடுக்குமாறு எங்களை மத்திய அரசாங்கம் விடக்கூடாது. நாங்கள் முதலில் இந்திய பிரஜைகள்; பின்னர்தான் கட்சிக்காரர்கள்" என்று கேரள பிரதேச காங்கிரஸ் தலைவர் சங்கர் இங்கு பொதுக்கூட்டமொன்றில் பேசுகையில் கூறினர்.

இக்கூட்டம் பாரதிய வித்யா பவனில் நடைபெற்றது.

## உ. பி., எம். எல். ஏக்களுக்கு இலவச பஸ் பிரயாண வசதி

லக்ஷ்மணபுரி, ஜூலை 27— அரசாங்கப் போக்கு வரத்து பஸ்களில் பிரயாணம் செய்யும் எல்லா எம். எல். ஏ.க்களும், எவ்விதக் கட்டணமுமின்றி இலவசமாகப் பிரயாணம் செய்வதற்கு அவர்களுக்கு இலவச 'பாஸ்'கள் வழங்குவதென்று உத்தரப்பிரதேச சர்க்கார் முடிவு செய்துள்ளது.

இன்று ராஜ்ய சட்டமன்றத்தின் இருசபைகளின் கூட்டுக் கூட்டத்தைத் துவக்கி வைத்துப் பேசுகையில் கவர்னர் வி. வி. கிரி மேற்கண்ட முடிவை அறிவித்தார்.

# புதுவைத் தேர்தல் நிதி உடனே தாரீர்!

## மாகாண செயற்குழு அறிக்கை

கட்சி அங்கத்தினர்களுக்கும், அனுதாபிகளுக்கும் வேண்டுகோள்

புதுவை ராஜ்ய சட்டசபைத் தேர்தலில் போட்டியிடும் அபேட்சகர்களின் இறுதிப் பட்டியல் வெளியிடப்பட்டிருப்பதை நீங்கள் அறிவீர்கள். ஆகஸ்ட் 11-ந்தேதி புதுவையிலும் 14-ந்தேதி காரைக்காலிலும் வாக்கெடுப்பு நடைபெறப்போகின்றது. கட்சியின் தலைமையில் மக்கள் முன்னணி புதுவை ராஜ்யத்தில் ஒரு ஜனநாயக மாற்று சர்க்காரை அமைக்கும் நோக்கத்துடன் தீவிரமாகத் தேர்தல் இயக்கத்தில் இறங்கியுள்ளது. காங்கிரஸ் கட்சியின் பண பலத்தையும், சூழ்ச்சிகளையும் எதிர்த்து சாதாரண மக்களைத் திரட்டி வெற்றி காணுவதற்காக கட்சி நடத்தும் தேர்தல் இயக்கத்திற்கு உடனடியாக நிதி தேவைப்படுகிறது. எனவே கட்சியின், ஒவ்வொரு கிளையும் இந்த அறிவிப்பைக் கண்டவுடன் அவசர உணர்வோடு, குறைந்த பட்சம் ஐந்து ரூபாய் கட்சியின் தேர்தல் காரியாலயத்திற்கு அனுப்பும்படி வற்புறுத்திக் கேட்டுக்கொள்கிறோம்.

அனுதாபிகள் தேர்தலில் கட்சி வெற்றி பெற தங்களால் இயன்ற பண உதவி செய்யும்படி கட்சியின் அனுதாபிகள் அனைவரையும் பணிவன்புடன் கேட்டுக்கொள்ளுகிறோம்.

அனுப்ப வேண்டிய விலாசம்!
செயற்குழு, தமிழ்நாடுகவுன்சில், இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சி

வி. பி. சிந்தன்,
கம்யூனிஸ்டு கட்சி ஆபீஸ்
7, வெள்ளாளத் தெரு, புதுவை,

# பாடபுத்தகங்கள் மூலம் கம்யூனிஸ போதனை என்ற குற்றச்சாட்டு வெறும் கற்பனையே

## கம்யூனிஸ்ட் 'ஸெல்' நீதிமன்றங்கள் என்பதும் சுத்த அபத்தம்!

## கேரளக் காங்கிரஸின் 'மகஜ'ருக்கு கேரள சர்க்காரின் பதில்

### ஆக்கபூர்வமான வழியை கடைப்பிடிக்கும்படி வேண்டுகோள்

(நேற்று வெளிவந்த கேரள சர்க்கார் பதிலின் பிற்பகுதி)

கேரள சர்க்காரின் புதிய போலீஸ் கொள்கையை தாறுமாருகத் திரித்துக் கூறுகிருர் கேரள பிரதேச காங்கிரஸ் தலைவர்.

கேரள சட்டசபையின் காங்கிரஸ் உறுப்பினர்கள் குற்றங்கள் நிகழ்ந்தபோது நடவடிக்கை எடுக்கும்படி விண்ணப்பித்தனர் உடனடியாகப் போலீசார் நடவடிக்கை எடுத்துவந்தனர்.

#### கம்யூனிஸ்ட் 'ஸெல்' நீதிமன்றங்கள்

கம்யூனிஸ்ட் 'ஸெல்' நீதிமன்றங்கள் இயங்குவதாக புகார் கூறப்படுகிறது. அவ்வித நீதிமன்றங்கள் சில எதிர்க்கட்சித் தலைவர்களின் கற்பனையே தவிர வேறல்ல அவ்வித நீதிமன்றங்கள் இருக்கவே இல்லை. கம்யூனிஸ்ட் கட்சியையும் சர்க்காரையும் அடகீர்த்திக்குள்ளாக்கவே எதிர்க்கட்சியினர் இவ்வித வீண் புரளிகளைக் கிளப்புகின்றனர்.

#### குற்றங்கள் பற்றி புள்ளி விவரம்

குற்றங்கள் பற்றிய புள்ளி விவரங்களைக் கூறுவதில் கேரள பிரதேச காங்கிரஸ் கமிட்டி தலைவர் அதிகப் புத்திசாலித்தனத்தைக் காட்டிவிட்டார். 1953 1954, 1955 ஆண்டுகளில் இந்தியா முழுவதிலும் குற்றங்கள் கணிசமான அளவு குறைந்திருந்து 1956 முதற்கொண்டு அதிகரிக்கலாயின. ஆகவே 1953 முதல் 1956 வரை குற்றங்களின் சாசரி எண்ணிக்கையை 1957, 1958 வருடங்களில் நடந்த குற்றங்களின் எண்ணிக்கையுடன் ஒப்பிடுவது அநீதிகரமானதே. இந்தியா முழுவதிலும் குற்றங்கள் 1956-ம் வருஷத்திற்குப் பிறகு அதிகரித்தேயுள்ளன.

இதர ராஜ்யங்களைப்பொறுத்த புள்ளி விவரங்களை கேரள நிலவரம் பற்றிய புள்ளிவிவரங்களுடன் ஒப்பிட்டுப் பார்த்தால், கேரளத்தில் சட்டம், அமைதி பராமரிப்பில் கேரள சர்க்காரிடம் தவறில்லை என்பது தெளிவாகும்.

#### குற்றம்புரிவோர் யாராலும் நடவடிக்கை

எதிர்க்கட்சி ஊழியர்களை அழித்துவிட முயற்சி செய்யப்படுவதாகக் கூறும் குற்றச்சாட்டு வெறும் அவதூறும் பொய்யுமேயாகும். இது சம்பந்தமாக முக்கியமாக கவனிக்க வேண்டிய விஷயம் ஒன்று உண்டு. எந்தக் கம்யூனிஸ்டாவது எதிர்க்கட்சி ஊழியர்களைத் தாக்கினரா என்ற நோக்குடன் கவனிப்பதைவிட, கம்யூனிஸ்டுகள் குற்றமிழைத்தால் சர்க்கார் யந்திரம் அந்தக் கம்யூனிஸ்டுகள் மீது நடவடிக்கை எடுக்கவில்லையா என்பதைக் கவனிக்க வேண்டும். கம்யூனிஸ்டுகளோ ஆதரவாளரோ குற்றமிழைத்ததாக போலீஸுக்குத் தகவல் கிடைத்ததும் போலீஸார் நடவடிக்கை எடுக்காத சம்பவம் ஒன்றுகூட எடுத்துக்காட்ட முடியாது. பட்டம் தாணுப் பிள்ளைக்கு அவமதிப்பு நேர்ந்தது; அவர் போலீஸுக்கு அறிவிக்கவில்லை ஆனால் போலீஸார் நடவடிக்கை எடுக்கத் தவறவே இல்லை.

#### உத்தியோகஸ்தர்களிடை கட்டுப்பாடு குலையவில்லை

சர்க்கார் உத்தியோகஸ்தரின் கட்டுப்பாடு, கடமையுணர்ச்சி குலைந்துவிட்டதாகக் கூறப்படுவதும் வீண் புரளியே இவ்விதப் புரளி செய்யும் எதிர்க்கட்சியினரிடையே கட்டுப்பாடும் குலைந்துவிட்டது.

சர்க்கார் ஊழியர்கள் பல பிரச்சினைகள் குறித்து தனிப்பட்ட முறையில் அபிப்பிராயங்கொண்டிருக்கக்கூடும். ஆனால் அவர்கள் தங்கள் அபிப்பிராயங்களை, தங்களிடமே வைத்துக்கொண்டு, சர்க்காரின் விசுவாசமுள்ள ஊழியர்களாக பணியாற்றவேண்டியது, இந்தக் கொள்கையைத்தான் கேரள சர்க்கார் கடைப்பிடித்து வருகிறது.

முன்பிருந்த சர்க்கார்களிடம் விஸ்வாசத்துடன் ... போலவே சர்க்கார் ஊழியர்கள் ... [illegible]

காங்கிரஸ் தலைவர்கள் சட்டசபைக்குள்ளும் வெளியிலும் சர்க்கார் ஊழியர்களை சர்க்காரின் உத்தரவுகளுக்குப் பணிய வேண்டாமென்று தூண்டுதல் செய்து வந்த பல உதாரணங்களை கேரள சர்க்கார் எடுத்துக்காட்டக்கூடும். சர்க்காரின் உத்தரவுகள் சட்டவிரோதமானவை என்று சர்க்கார் ஊழியர்கள் நினைத்தால் அந்த உத்தரவுகளை மீறி நடக்கலாமென்று தூண்டினர்.

அனுமதியின்றி நிலங்களில் குடியேறியவர் கம்யூனிஸ்ட்கள் என்றும், அவர்களது குடியேற்றத்தை சர்க்கார் ஆதரித்தனரென்பதும் பொய் என்பது நிரூபிக்கப்பட்டது.

#### கள்ளிறக்கும் தொழிலாளர் கோரிக்கைபேரில் நடவடிக்கை

அப்காரி சட்டத்தின் ஷரத்துகளை மீறியதாகவும் ஒரு குற்றச்சாட்டு கூறப்பட்டது. சர்க்கார் தனது நலன்களையும் தொழிலாளரின் நலன்களையும் முன்னிட்டே கூட்டுறவு முறையை அமல் நடத்த முடிவு செய்தது. கள்ளுக்கடைகள் நடத்தும் பொறுப்பைத் தங்களிடம் ஒப்புவிக்குமாறு கள்ளிறக்கும் தொழிலாளர் சங்கங்கள் நீண்ட காலமாகக் கோரிவந்தன. இவ்வித நிலைமையில், சர்க்கார், அத்தொழிற்சங்கங்களின் பிரேரணைகளை ஆலோசனை செய்து சில கள்ளுக்கடைகளை ஸ்தல கள்ளிறக்கும் தொழிலாளர் அமைக்க கூட்டுறவு சங்கங்களிடம் ஒப்புவிக்க முடிவு செய்தது. ஒரு பரீட்சார்த்த ஏற்பாடாக, சர்க்கார் மூன்று ஊர்களைப் பொறுக்கி எடுத்தது; திருச்சூர், கோட்டயம், ஆலப்புழை, ஆகிய இடங்களில் ஆனால் கோட்டயம் கள்ளிறக்கும் தொழிலாளர்கள் நிதிவசதியின்மையால் காண்ட்ராக்டை ஏற்க முடியவில்லை. மற்ற மூன்று இடங்களில் கூட்டுறவு சங்கங்கள் கடைகளை நன்ருக நடத்தின; இந்தக் கூட்டுறவு சங்கங்களிடம் கடைகளை ஒப்படைத்ததால் 4 லட்சம் ரூபாய் நஷ்டம் சர்க்காருக்கு ஏற்பட்டதென்ற கூற்று உண்மையல்ல. 1959-60-ல் முந்திய ஆண்டைவிட ரூ. 6½ லட்சம் அதிகமாகக் கிடைத்தது.

#### சர்க்கார் உத்தியோக கமிஷன் விஸ்தரிப்பு

சர்க்கார் உத்தியோக கமிஷன் விஸ்தரிப்பு அவசியமென்பது நீண்டகாலமாகவே உணரப்பட்டு வந்தது. மலபார் மக்கள் உத்தியோகங்களுக்கு நியமன விஷயத்தில் மலபாரின் நலன்கள் போதிய அளவு கவனிக்கப்படவில்லையென்று பகிரங்கமாகக் குறைகூறி வந்தனர்.

மலபார் மக்களின் இந்த குறைபாடு சட்டசபையில் மலபார் உறுப்பினரால் பலமுறை தெரிவிக்கப்பட்டு வந்தது. சர்க்கார்உத்தியோகக் கமிஷனில் ஒரு முஸ்லீம் உறுப்பினர் இல்லையென்று முஸ்லீம் லீகும் ஆட்சேபம் தெரிவித்து வந்தது. இவ்விஷயங்களையெல்லாம் ஆலோசனை செய்து, அக்கமிஷனில் மேற்கொண்டு இரு உறுப்பினர்களை நியமிப்பது அவசியமென்று சர்க்கார் முடிவு செய்தது. ஒரு ஸ்தானம் காலியானது. மூன்று புது உறுப்பினர்கள் அக்கமிஷனில் நியமிக்கப்பட்டனர். அம...

மூலமும் யோக்கியப் பொறுப்புள்ளவர்கள் என்பதைக் கேரள பிரதேச காங்கிரஸ் கமிட்டிகூட மறுக்கவில்லை.

கம்யூனிஸ்ட் கட்சி நிதிக்கு நன்கொடைகள் வசூலிக்குமாறு ஆபீசர்கள் நிர்ப்பந்திக்கப்படுகின்றனரென்ற புகாரும் நிஜமல்ல. ஒரு குறிப்பிட்ட சம்பவம் மகஜரில் கூறப்பட்டிருக்கிறது. அதைப்பற்றி சர்க்கார் விசாரித்து வருகிறது.

#### பொதுஜனத் தொடர்பு இலாகா

பொதுஜனத் தொடர்பு இலாகா, சர்க்காரின் கொள்கைகளையும் வேலைத் திட்டங்களையும் விளம்பரப்படுத்துவதோடு மட்டும் நிற்காமல் கம்யூனிஸ்ட் கட்சியின் நலன்களுக்கு ஒத்தவாறு நடக்கவேண்டியிருக்கிறதென்ற குற்றச்சாட்டும் ஆதாரமற்றதே கம்யூனிஸ்ட் கட்சி வெளியிட்ட எந்த அறிக்கையையும் சர்க்காரின் பொதுஜனத் தொடர்பு இலாகா ஒரு முறைகூட விளம்பரப்படுத்தியதாகவிருப்பிக்கவே முடியாது.

சர்வகலாசாலை, சர்க்காரின் மற்றொரு இலாகா ஆகிவிட்டதாகக் கூறப்பட்ட குற்றச்சாட்டைப் பொறுத்தவரையில், புதிய கேரள சர்வகலாசாலை இந்நாட்டிலுள்ள இதர பெரிய சர்வ கலாசாலைகளைப்போல பூரண சுதந்திரம் வாய்ந்த சட்டபூர்வமான ஸ்தாபனம் என்பது வெளிப்படை.

#### பாட புத்தகங்கள்

பாட புத்தகங்கள் மூலம் கம்யூனிஸ போதனை செய்வதாக கூறப்பட்ட புரளிகள் ஆதாரமற்றவை என்று சர்க்கார் நியமித்த கமிட்டி அறிவித்தது தெரிந்ததே. சில பகுதிகளை எடுத்துவிட வேண்டுமென்று அக்கமிட்டி செய்த சிபார்சையும் இந்த ஆண்டு பாட புத்தகங்கள் வெளியிட்ட போது சர்க்கார் நிறைவேற்றி வைத்தது.

#### தொழிலாளர் விஷயத்திலும் பட்சபாதமில்லை

தொழிலாளர் எந்தக் கட்சியைச் சேர்ந்திருந்தாலும் பாரபட்சம் பாராட்டாமல் சர்க்கார் நடக்கிறது. இதற்கு எத்தனையோ உதாரணங்களைச் சொல்லக்கூடும். சில தொழிற்தகராறுகளையும் அவை சம்பந்தமாக சர்க்காரின் நடத்தையையும் கேரள பிரதேச காங்கிரஸ் கமிட்டி திரித்துக்கூறியுள்ளது. ஹைகோர்ட்டு முன்பு முதலாளிகள் தாக்கல் செய்த மண்டமஸ் ரிட் மனுக்களை எடுத்துக்காட்டி தவருன அபிப்பிராயம் உண்டுபண்ண முயற்சிக்கப்பட்டிருக்கிறது. ஹைகோர்ட்டு முன்பு நடந்த வழக்குகளில் என்ன நடந்ததோ அதைத் திரித்துக்கூறும் அளவுக்கு கேரள காங்கிரஸ் கமிட்டித் தலைவர் ஆணவத்துடன் நடந்துள்ளார்.

ராஜ்ய நிதிகள் சம்பந்தமாக மகஜரில் காணும் ஊகங்கள் விபரீதமானவையாகும். எந்த ராஜ்யத்திற்கும் நிதி நெருக்கடி ஏற்பட்டால் அது திட்டக் கமிஷனுக்குத் தெரியாமற் போகுமா?

#### லஞ்ச ஊழல் குற்றச்சாட்டுகள்

விவசாய கடன்கள், பஸ், மார்க்கெட்டுகள், தடையுத்தரவுகள், காண்ட்ராக்ட்கள், முதலியன கம்யூனிஸ்ட் கட்சிக்கு நிதி உதவி புரிவோருக்கே அளிக்கப்படுகின்றனவென்றுமகஜர்குறிப்பிடுகிறது இதை கம்யூனிஸ்ட் கட்சியுடன் எவ்வித சம்பந்தமுமில்லாதவர்களும், பல காங்கிரஸ்வாதிகளும் இதர எதிர்க்கட்சியினரில் பலரும் மறுக்கின்றனர்.

திரு. ஈஸ்வர அய்யருக்குச் சொந்தமான நிலங்களைச் சர்க்கார் 2½ லட்சம் ரூபாய்க்கு விலை கொடுத்து எடுத்துக்கொண்டது சம்பந்தப்பட்ட வரையில், அவ்விதம் பலரது நிலங்கள் ராஜ்ய பஸ் போக்குவரத்து வேலை விஸ்தரிப்புக்காக எடுத்துக்கொள்ளப்பட்டன. சாதாரண சட்ட நடைமுறை பிரகாரமே அந்நிலங்கள் விலைக்கு வாங்கப்பட்டன; விலை ரெவின்யூ அதிகாரிகளால் நிர்ணயிக்கப்பட்டது கலெக்டர் மேற்பார்வையிட்டார்.

#### ஆந்திர அரிசி பேர அறிக்கை

ஆந்திர அரிசி பேர விசாரணை கமிட்டி அறிக்கையும் மகஜரில் இடம்பெறுகிறது. இந்தப் பேரத்தில் கம்யூனிஸ்ட் கட்சி எந்த தொகையையும் எடுத்துக் கொண்டதாக அந்த அறிக்கையில் கூறப்படவே இல்லையென்பதை நாங்கள் சுட்டிக்காட்ட விரும்புகிறோம்.

#### தேர்தல் நடத்துவதால் பிரச்சினை தீராது

தேர்தல்கள் நடத்துவதால் பிரச்சினை தீராது என்பதை கேரள நிலவரம் அறிந்த அனைவரும் ஒப்புக்கொள்கின்றனர். இடைக்கால தேர்தல் நடத்தி, கம்யூனிஸ்ட் கட்சி மீண்டும் வெற்றிபெறுமானல், கடந்த 27 மாத நிகழ்ச்சிகளே மீண்டும் சம்பவிக்கும். காங்கிரஸ், எதிர்க்கட்சியாக பொறுப்புடன் இயங்கினல்தான் நிலைமை மாறும் காங்கிரஸ் உண்மையில் இவ்விதம் நடக்க தயாராயிருக்குமானல், ஏன் இப்பொழுதே நடக்கக்கூடாது; ஏன் பிரதமர் நேருவின் யோசனைக்குச் செவிசாய்த்து பேச்சுவார்த்தைமூலம் பிரச்சினைகளுக்குப் பரிகாரம் காணக்கூடாது?

மற்றும், காங்கிரஸ்-பி சோ.-முஸ்லீம் லீக், நாயர் சேவா சங்கம்-கத்தோலிக்க சர்ச் இவை கூட்டாக வெற்றிபெற்ருல், பதவிக்கு வரும் புதிய சர்க்கார் அரசியல் கருத்து வேற்றுமைகளாலும் போட்டிகளாலும் சரியாக இயங்கமுடியாது; கடந்த பத்து ஆண்டுகளுக்கு மேலாக நடந்ததே மீண்டும் நிகழும். ஸ்திரமற்ற மந்திரிசபைகள் ஏற்படுவதாக முடியும். ஆகவே இருவிதத்திலும் இடைத் தேர்தல்கள் நடத்தினல், என்ன விளைவு ஏற்படுமென்ருல் நெருக்கடி நீடிப்பதாகவே முடியும்.

#### எமது வேண்டுகோள்

ஆகவே நாங்கள் ஜனதிபதிக்கும் பிரதம மந்திரிக்கும் மத்ய சர்க்காரின் இதர தலைவர்களுக்கும் இந்த ராஜ்ய மக்களுக்கும் தேச மக்களுக்கும் நாங்கள் விடுக்கும் வேண்டுகோள் இதுவே. பயனற்ற வழியைக் கைவிட்டு, பிரதமர் குறிப்பிட்டதும் கேரள மந்திரிசபை ஏற்றுக்கொண்டதுமான ஆக்கபூர்வமான வழியைக் கடைபிடித்துநடக்கும்படி கேரள பிரதேசக் காங்கிரஸ் கமிட்டிக்கு ஜனதிபதி பிரதமர் முதலியோர் அறிவுறுத்த வேண்டுமென்பதே எமது வேண்டுகோள். (பி. டி. ஐ)

# சுசேதாகிருபளானியின் அறிக்கை வடிகட்டின பொய்யாகும்!

## செங்கனூர் சம்பவம் குறித்து கேரள அரசாங்கம் மறுப்பு

திருவனந்தபுரம், ஜூலை 27— ஜூலை 24-ல் செங்கனூரில் போலீஸ் சட்டத்தை [illegible] படுத்தும் சாட்சியங்களைத் தயார் செய்வதற்காகப் போலீஸ்காரர்கள் சாலையின் குறுக்கே தடுப்புகளைப் போட்டுக் கொண்டிருந்ததைத் தான் கோட்டயம் செல்லும் வழியில் கண்டதாக காங்கிரஸ் பொதுச் செயலாளர் திருமதி சுசேதா கிருபளானி கூறியுள்ளது வெறும் பொய்ப் பிரசாரம் என்று கேரள அரசாங்கம் மறுத்துள்ளது.

இத்தகைய குற்றச்சாட்டை காங்கிரஸ் பொதுச் செயலாளர் பதவியில் இருக்கும் ஒருவர் செய்ததால் இவ்விஷயம் மிகத் தீவிரமாக விசாரிக்கப்பட்டதென அரசாங்கக் குறிப்பு கூறுகிறது.

"செங்கனூர் தாலூகா [illegible] உள்ள சாலையில் 23 24 தேதிகளில் பல இடங்களில் தடுப்புகள் வைக்கப்பட்டன, மரங்களை இழுத்துவரவும் பாலங்கள், மதகுகள் முதலியவற்றில் இருந்த கற்களை இடம்மாற்றவும் ஒரு யோசனைகூட உபயோகப் படுத்தப்பட்டுள்ளது.

"25ம் தேதி இத்தடுப்புகளை அப்புறப்படுத்த ஒரு போலீஸ் கோஷ்டி அனுப்பப் பட்டது, அதன் மூலம் வண்டிப் போக்குவரத்து ஒழுங்குபடுக்கப்பட்டது.

"இந்த அப்புறப் படுத்தும் வேலை தபால் அலுவலகத்துக் கருகே நடந்துகொண்டிருக்கும் பொழுது சுமார் 1-30 மணிக்குத் திருமதி சுசேதா கிருபளானி கோட்டயம் செல்லும் வழியில் அங்கு வந்து சேர்ந்தார். ஜாக்கிரதையாக வண்டியைச் செலுத்துமாறு போலீஸ் கேட்டுக் கொண்டது. ஆனால் அவர் காரை நிறுத்தச் செய்துவிட்டுப் பக்கத்திலிருந்த தபால் அலுவலகத்துக்குச் சென்ருர். ஏற்கனவே அங்கு சென்றிருந்த ரெவினியூ டிவிஷனல் ஆபீஸர், டெபுடி சூப்பிரண்டெண்ட், முதலியோர் அங்கு இருந்தனர். அவர்களுடன் ஒரு போட்டோ கிராபரும் இருந்தார். சாலையை துப்புரவு செய்வதில் மஸ்தூர்கள் ஈடுபட்டிருந்தனர், திருமதி கிருபளானி இந்த அதிகாரிகள் யாரிடமும் எதுவும் விசாரிக்காமலேயே தமது பிரயாணத்தைத் தொடர்ந்தார் என அரசாங்கம் வெளியிட்டுள்ள பத்திரிகைக் குறிப்பு கூறுகிறது.

# பம்பாய் சர்க்காரின் மாஜி காரியதரிசிக்கு சிறைத் தண்டனை விதிக்கப்பட்டது

பம்பாய், ஜூலை 28— [illegible] சர்க்காரின் முன்னாள் காரியதரிசி [illegible] ரூ. 78,000 [illegible] ரூ. 2000 அபராதம் [illegible] மாத சிறைத்தண்டனையும் விதித்தார்.

அவர் மீது சாட்டப்பட்ட குற்றமாவது: விமான மூலம் சுவிட்சர்லாந்துக்குச் [illegible] சல்லவிருந்தபோது அவரது பெட்டியில் ரூ 1,90 100 நோட்டுகளும் மேலும் அவரை சோதனை செய்ததில் 100 பவுனுக்கும் 20 சுவிஸ் பிராங் நாணயத்திற்கும் செக் இருந்ததாகவும் கண்டு பிடிக்கப்பட்டது. அவர் கடந்த பிப்ரவரி 18ம் தேதி கைது செய்யப்பட்டார். —பி.டி.ஐ.



## சென்னை-1

31—7—59

காலை முதல் ஒலிபரப்பு

6-55 மங்கள இசை 7-00 பக்திப்பாடல்கள் 7-10 நிகழ்ச்சிக் குறிப்புகள், வானிலை அறிவிப்பு 7-15 தமிழில் செய்தி 7-30 வி. வி. சடகோபன் (திருச்சி அஞ்சல்) 8-00 மதுரகீதம், 8-15 ஒலிபரப்பு முடிவு.

இரண்டாவது ஒலிபரப்பு

12-30 நடுத்தரப்பள்ளிகளுக்கு 1-00 மாதர் நிகழ்ச்சி 1-30 கான மஞ்சரி, 1-40 ஹிந்தியில் செய்தி 1-50 இசைச் செண்டு, 2-00 தமிழில் செய்தி, 2-10 உயர்தரப் பள்ளிகளுக்கு, 2-40 வானிலை அறிவிப்பு, ஒலிபரப்பு முடிவு.

மாலை மூன்ருவது ஒலிபரப்பு

5-30 வீணை ஆ. இ. ரே. வித்வான், 5-45 காந்தி சர்ச்ச (திருச்சி அஞ்சல்) 6-00 பஜனை 6-05 பிராந்தியச் செய்திகள், 6-15 கிராம நிகழ்ச்சிகள் (திருச்சி அஞ்சல்) 7-15 தமிழில் செய்தி, 7-30 வேதாரண்யம் ஜி. வேதமூர்த்தி நாகஸ்வரம் நாச்சியார் கோயில் பி. ராகவ பிள்ளை தவுல். 9-00 கதம்பம், 9-30 'ஆடும அழகே வா' மெல்லிசைப் பாடல்களைக் கொண்டு தயாரித்தது, தயாரிப்பு: குஹன், 9-45 இசை அமுதம், 10-30 வானிலை அறிவிப்பு, ஒலிபரப்பு முடிவு.

## திருச்சி

31—7—59

காலை முதல் ஒலிபரப்பு

7-00 இசைக் கதிர் பக்திப் பாடல்கள் 7-10 நிகழ்ச்சிக்குறிப்புகள் 7-15 தமிழில் செய்தி 7-30 வி. வி. சடகோபன் பாட்டு 8-00 ஆங்கிலத்தில் செய்தி 8-15 ஒலிபரப்பு முடிவு.

இரண்டாவது ஒலிபரப்பு

12-30 நடுத்தரப்பள்ளிகளுக்கு 1-00 மாதர் நிகழ்ச்சி (சென்னை 1-ல் உள்ளபடி) 1-30 வாத்ய இசை 1-40 ஹிந்தியில் செய்தி 1-50 குரல் இசை 2-00 தமிழில் செய்தி 2-10 உயர்தரப் பள்ளிகளுக்கு 2-40 இடை வேளை 2-45 வானிலை அறிவிப்பு ஒலிபரப்பு முடிவு

மாலை மூன்ருவது ஒலிபரப்பு

4-45 விவித பாரதி, கர்நாடக சங்கீத நிகழ்ச்சி (பம்பாய் அஞ்சல்) 5-45 காந்தி நினைவுரை 6-00 அறிவிப்புகள், 6-05 பிராந்திய செய்திகள் 6-15 கிராம நிகழ்ச்சி 7-15 தமிழில் செய்தி 7-30 வேதாரண்யம் ஜி வேதமூர்த்தி நாகஸ்வரம் நாச்சியார்கோயில் பி ராகவபிள்ளை தவுல் (சென்னை அஞ்சல்), 9-00 ஆங்கிலத்தில் செய்தி 9-15 ஒலிப்பதிவுகள் 9-30 ஆடும் அழகே வா' மெல்லிசைப் பாடல்களை கொண்டு தயாரித்தது (சென்னை 1-ல் உள்ளபடி) 9-45 என் எஸ் பசந்த கோகிலம் 10-00 ஒலிபரப்பு முடிவு

# மே. வங்க உணவு ஆலோசனை போர்டிலிருந்து எதிர்க்கட்சிகளின் பிரதிநிதிகள் வெளியேறினர்

## பதுக்கல் பேர்வழிகளுக்கு ஆதரவு தரும் போக்கை எதிர்த்து நடவடிக்கை

கல்கத்தா, ஜூலை 27— மேற்கு வங்க உணவு ஆலோசனை போர்டிலிருந்து கம்யூனிஸ்ட், ஆர். எஸ் பி., சோஷலிஸ்ட் ஐக்கிய அணி முதலிய கட்சிகளைச் சேர்ந்த உறுப்பினர்கள் இன்று வெளியேறினர் "இந்த போர்டில் இருப்பது பயனற்றது" என அவர்கள் அறிவித்தனர்.

போர்டைக் கலந்தாலோசிக்காது உணவுக் கட்டுப்பாட்டை வாபஸ் பெற்றது, பரீட்சார்த்த நிவாரண வேலைகளை மேற்கொள்வதென ஆரம்பத்தில் அளித்த உறுதிமொழிகளை அமுல் செய்யத் தவறியது பதுக்கப்பட்டுள்ள உணவுதானியங்களைப் பறிமுதல் செய்வதில் தமது ஒத்துழைப்பை ஏற்க மறுத்தல் முதலிய காரணங்களால் தாம் இந்த போர்டிலிருந்து வெளியேறுவதாக வெளியேறியவர்கள் சார்பில் தோழர் ஜோதிபாசு அறிவித்தார்.

இந்தக் காரணங்கள் உண்மையேயாயினும் மேற்சொன்ன நடவடிக்கைகளில் போர்டைக் கலந்தாலோசிக்க அவகாசம் கிடைக்கவில்லை என ராஜ்ய முதன் மந்திரி டாக்டர் பி. ஸி ராய் மழுப்பினர்.

இந்த வெளிநடப்பில் பார்வட் பிளாக், பி. சோ. பிரதிநிதிகள் கலந்துகொள்ளவில்லை.

#### பி. சோ. நேரடி நடவடிக்கை

பி. சோ. சில கோரிக்கைகளை அரசாங்கத்தின் முன் வைத்திருப்பதாகவும் அவை ஏற்றுக்கொள்ளப்படாவிடில் செப்டம்பர் 1ம் தேதியிலிருந்து "நேரடி நடவடிக்கை"யில ஈடுபடவிருப்பதாகவும் பி.சோ. தலைவர் தேவன் ஸென் அறிவித்தார்.

#### ஒத்துழைப்புக்கு இடமில்லை

ராஜ்ய உணவுத்துறை அமைச்சருடன ஒத்துழைப்புக்கு இடமில்லாதலால் ஜோதி பாசு (கம்யூனிஸ்ட் கட்சி), திரிதிப் சௌத்ரி (ஆர். எஸ். பி.), சோஷலிஸ்ட் ஐக்கிய அணி உறுப்பினர்கள் ஆகியோர் உணவு ஆலோசனை போர்டிலிருந்து [illegible] (பி. டி. ஐ)

### பூமி அதிர்ச்சி

திருவெங்காடு. ஜூலை 28— நேற்றிரவு 8-55 மணிக்கு [illegible]லச்சேரி, கண்ணனூர் ஆகிய இடங்களில் லேசாக பூமி அதிர்ச்சி ஏற்பட்டது. சுமார் 2 விநாடி நீடித்தது.

விலாசம் :
கலைஞர் குழு கன்வீனர்
தோழர் டி. கே. பாலச்சந்திரன்
14, நாச்சியப்ப செட்டித் தெரு,
மயிலாப்பூர்,
சென்னை-4.

### தங்கம், வெள்ளி

சென்னை, ஜூலை 29

| | |
|---|---|
| பவுன் | ரூ 79-8-0 |
| தங்கம் (செடி) | ரூ 119-4-0 |
| மூளை தங்கம் | ரூ 117-4-0 |
| வெள்ளி 100 தோலா எடை ரூ | 199 0-0 |
| வெள்ளி ரூ. எடை ரூ. | 2 0-6 |

மணிலா பயறு
581 ராத்தல் கொண்ட ரூ. 186 முதல் 190 வரை

மணிலா எண்ணெய்
100 ரா. கொண்ட பாரம் 1-க்கு எக்ஸ்பெல்லர் ரெடி மதராஸ் கிடங்கு டெலிவரி 8% F F A (மொத்தவிலை)

| | |
|---|---|
| | ரூ. 351-00 |
| ஆகஸ்ட் | 350-50 |
| டிசம்பர் | 308-00 |

விளக்கெண்ணெய்
500 ரா. பாரம் 1-க்கு (ராஸ் கிடங்கு டெலிவரி)
திருப்பத்தூர் ரூ. 330 00
சேலம் 'தாமரை' அன்னம் (87½ ரா. டின் 1-க்கு) ரூ. 25-50

தேங்காய் எண்ணெய்
(87 ராத்தல் டின் 1-க்கு விற்பனை வரி உட்பட)
கொல்லம் சரக்கு

| | |
|---|---|
| எம்.எஸ். மார்க்கு | ரூ. 40-00 |
| அம்பு மார்க்கு | ரூ. 39-00 |
| ராஜா மார்க்கு | ரூ. 39-00 |

சர்க்கரை

| | |
|---|---|
| [illegible] (2 அங்குல) | 114.00 |
| [illegible] | 114.00 |
| உய்யூரு | 114.00 |



# இதர கோளங்கட்கு ரஷ்ய ராக்கெட்

மாஸ்கோ, ஜூலை 28— சோவியத் செயற்கை கோள நிலையத்தின் தலைவர் அண்டோலி பலகான்ராவோ, ரஷ்யா விரைவில் ஆராய்ச்சிக் கருவிகள் அடங்கிய ராக்கெட்டுகளை இதர கோளங்களுக்கும் அனுப்புமென்று இன்று கூறினர்.

# கோரிக்கை நிறைவேருவிட்டால் எந்நேரத்திலும் வேலைநிறுத்தம்

## இந்திய மருத்துவக் கல்லூரி மாணவர் நோட்டீஸ்

சென்னை, ஜூலை 28— தங்களது 11 அம்ச கோரிக்கைகள் நிறைவேருவிட்டால் ஆகஸ்ட் 3-ம் தேதி முதல் காலவரையின்றி அமைதியாக வேலைநிறுத்தம் செய்யப் போவதாக சர்க்கார் நடத்தும் இந்திய மருத்துவக் கல்லூரி மாணவர்கள் நேற்று சர்க்காருக்கு நோட்டீஸ் கொடுத்துள்ளனர்.

'கோரிக்கைகள் நிறைவேருவிட்டால் வகுப்புகளுக்குப் போக மாட்டோம். இதனல் ஏற்படும் விளைவுகளுக்கு சர்க்கார்தான் பொறுப்பு" என்று மாணவர்களின் பொதுக் கவுன்ஸில் முடிவு எடுத்துள்ளது.

மாணவர்களின் கோரிக்கைகளில முக்கியமானவை வருமாறு: எப். ஸி. ஐ எம். படிப்பு என்பது கூடாது; இந்தப் படிப்பை மேற்கொண்டால் இப்போது ஜி ஸி. ஐ எம். படிப்பு மாணவர்கள் உயர் பட்டப்படிப்பில் சேரமுடியாமல் போய்விடும் ஜி ஸி ஐ எம் படிப்பு பெற்ற டாக்டர்களுக்கு எம்.பி.பி.எஸ். டாக்டர்களின் அந்தஸ்து கொடுக்கவேண்டும்; சர்க்கார் கல்லூரியை சென்னை சர்வகலாசாலை அங்கீகரிக்கும்படி நடவடிக்கை எடுக்க வேண்டும்; ஜி ஸி ஐ எம் மாணவர்களுக்கு பட்டப்படிப்புக்கு பிறகு உயர்பட்டப் படிப்புக்கு அருகதை உண்டு என்று நிர்ணயிக்க வேண்டும்.

ராயப்பேட்டையிலுள்ள சர்க்கார் ஆஸ்பத்திரி தங்களது கலாசாலை நிர்வாகியின் கீழ் கொண்டு [illegible] இந்திய [illegible] கல்லூரி மாணவர் பயிற்சிக்கு என [illegible] தனியாக ஒதுக்கப்பட வேண்டும்.

### கிளர்ச்சிக்காரர்கள் பஸ் மீது கல்லெறிந்தனர்

#### போலீஸ் வந்ததும் ஓடி மறைந்தனர்

கொல்லம், ஜூலை 28— கொல்லம் கலெக்டர் காரியாலயத்தின் முன் மறியல் நடத்திவிட்டு திரும்பிய 63 கிளர்ச்சிக்காரர்கள் எதிரே வந்த இரண்டு அரசாங்க பஸ்ஸின்மீது கற்களை வீசினர், ஒரு பஸ் பலத்த சேதமடைந்ததாகவும், இதையறிந்து போலீஸ் வந்ததும் கிளர்ச்சிக்காரர்கள் மறைந்து விட்டனரென்றும் தெரிகிறது. கிளர்ச்சிக்காரர்களில் 25 மாணவர்களுமிருந்தனர்.

### ஜப்பானிய சாகுபடி முறை சினிமாப் படம் தமிழகமெங்கும் காட்டப்படும்

சென்னை, ஜூலை 28— ஜப்பானிய சாகுபடி முறை பற்றிய சினிமாப் படம் தமிழில் தயாரிக்கப்பட்டுள்ளது சென்னை விவசாய இலாக்காவினல் தயாரிக்கப்பட்ட இப்படம் உணவு உற்பத்தியை பெருக்கும் பொருட்டு நாடெங்கும் காட்டப்படும். ஆயிரம் அடி நீளமுள்ள இப்படம் தேசிய விஸ்தரிப்பு திட்ட சார்பிலும் சமூக நல அபிவிருத்தி நிலையங்களின் சார்பிலும் எல்லாயிடங்களிலும் காட்டப்படும்.

[illegible] கப்பட்டுள்ளது. பி. டி. ஐ.

காஷ்மீரில்

# "கிளர்ச்சி செய்யாதீர்!"

## உணவு விலை உயர்வு எதிர்ப்புக் கிளர்ச்சியாளருக்கு பிரதமர் நேரு உபதேசம்!

ஸ்ரீநகர், ஜூலை 27— காஷ்மீரில் அரிசி விலைகள் திடீரென உயர்த்தப்பட்டுள்ளன. இதை ஆட்சேபித்து அங்குள்ள எதிர்க்கட்சிகள் கிளர்ச்சியை [illegible] மொன்றில் பிரதமர் நேரு பேசு[illegible]யில், "அரிசி விலைகள் உயர்த்தப்படுவதற்கு இது தருணமல்ல என்று எதிர்க்கட்சிகள் கருதினலும், ஆர்ப்பாட்டங்[illegible] சரியல்ல என்று உபதேசம் செய்தார்.

ஜனசக்தி அச்சகத்தில் அச்சிட்டு, வெளியிட்டவர் எஸ் கிருஷ்ணசாமி. ஆசிரியர்: ப. ஜீவானந்தம். முகவரி: 32, பிராட்வே, சென்னை-1.
Janasakthi
Broadway, Madras-1.